Registered No. M. 3536.

தனிப்பிரதி விலை { உள்நாடு அணா 1; பர்மா, சிலோன் „ 1½ }

# நவசக்தி

"NAVASAKTI"

வாரப்பதிப்பு

"எவ்வுயிர்க்கும் அன்பாயிரு"

சந்தா விவரம்

| | ரூ. | அ. |
|---|---|---|
| வருட சந்தா ... | 4 | 0 |
| ஆறுமாத சந்தா ... | 2 | 4 |
| வெளிநாடு-வருட சந்தா ... | 6 | 0 |

விளம்பர விகிதம்

பத்தி 1-க்கு வாரம் 1-க்கு ரூ. 6 0
சில்லறை விளம்பரம் 1 அங். 0 8
முன்பணமின்றி விளம்பரஞ் செய்யப்பட மாட்டாது.

சிலம்பு கரு — தாதுஞு ஐப்பசிமீ கசஉ (30—10—1936) வெள்ளிக்கிழமை — பரல் உசு

## ஊர்க்குருவிகள்

(எட்டயபுரம் - திரு. எஸ். குருகுஹதாஸப் பிள்ளை அவர்கள்)

(தொடர்ச்சி)

குதுகலங் கொண்ட குருவி இனங்காள் !
இதுவரை நீவிர் இயம்பிய யாவையுந்
தெரிந்தன னெனினுஞ் சிறப்புடன் காணும்
பரிதி யோடிடும் பாதைக் கோர்தடை
யாக வமைந்திடும் அரயரின் மனைகளில்
வேகமாய்ச் சாடி வேறு படுத்தும்
சூறையின் கேடு[11] சொல்லற் கரிதே.
தாரையை யடுத்துள தலம்வரை நிமிர்ந்து
தோன்றிடும் வரைகளாற் சூழப் பெற்றுள
ஆன்ற நொச்சிகள் [12]அனைத்தையு மவைதாம்
அரண்போற் காத்தலால் அமைதியி லாழ்ந்து
முரண்பா டின்றி முன்னுள நிலையில்
இருப்பன வென்றதை எவரே தெரியார் ?
விருப்ப முடனினும் வேண்டுவ தென்னெனில்
குடியானவர்தம் குழுவுடன் வாழுங்
குடிசையி னின்றுங் குடிபோய் வந்தபின்
இதுகால் நீவிர் ஏதுகண் டுரதைப்
பொதுப்படக் கூறின் போது மென்பேன்.
ஆண்டு கண்டவை யனைத்தும் வேறும் ;
ஆண்டுள மக்கள் அனைவரும் முன்பின்
பார்த்திரா முகத்தினர் பல்லோ ராவர்.
ஆர்ப்பர வத்துடன் அமைந்துள அடிச்சு
வடுக ளெல்லாம் மாயமாய் மறைந்தன.
நடுக்குறு தேகமும் நரைமயிர்த் தலையும்
உடையோ ரனைவரும் உயிர்துறந் தனரே !
நடைபயில் சிறுரோ நாறு வகையிற்
குடும்பக் கவலையிற் குழம்பிக் கிடக்கிறார்.
இடும்பை யறியா இளைஞ ராடிய
முற்ற மனைத்து மோன மாயின.
உற்று நோக்கின் உண்மையி லாங்கு
முன்னுள நிலைகள் முழுது மாறின
என்ற தென்பதை இயம்புங் காலை
மாறுத லின்றிய வடிவமாய்க் காண்பன
சீருடன் யாங்கள் செய்துள குடம்பைகள்
தாமெனச் சாலவே சாற்றிடு வோமே.
உடல்நலங் கொண்டும் உவகை மிகுத்துந்
தடங்கொள் ஞாலந் தன்னை முழுதுங்
ககன மார்க்கமாய்க் கண்டுள நீவிர்
புகன்றவை யாவும் புண்படு நெஞ்சனாய்
ஆக்கியே என்னை அகங்கெடச் செய்தன.
வாக்கும் வழியும் மயங்கிக் கிடக்கும்
அந்தர வழிக்கோர் அருந்துணை யாகி
மந்தரம் போல [13]மயங்கா நின்று
உறுதுணை புரிந்த உம்பர் கோமான்
மறுமையில் நமக்கவன் மாபெருந் துணைவனாய்ப்
பொன்னுல கம்வரை போந்து நிற்பான்
என்றதன் மறையை யெடுத்துக் காட்டா
நிற்கும் நுந்தம் நேர்படு சரிதம்
முற்றுந் தெரிந்து முழுமுதற் கடவுள்
வகுத்த வாங்கு வழிபட நின்று
தொகுத்துள நூற்களின் தொல்விதி தன்னை
அல்லும் பகலும் அகத்திற் கொண்டு
நல்வழி யதனில் நடவா மாந்தர்
இகபர வாழ்வில் இழிவு பட்டு
நகைக்கிட னுவார் நவிலுங் காலே

[11]சூறைவளிக்காற் றினையொத்த இராஜாங்கப் புரட்சியாளர்களால் நேரிடுங் கெடுதல்கள், [12]சிற்றூர்கள், [13]மந்தரபர்வதத்தைப் போல வாடாமல், 96—110 வரிகளில் இச்செய்யுளின் நீதிசாரம் (Moral) காணக் கிடக்கின்றது.

# அரசியல் அரங்கம்

## ஒரு சிறுகற்பனை நாடகம்

(திரு. அலங்கை இரத்தினம்)

### காட்சி—1

இடம்:—ஜினிவா சர்வதேச சங்கம். சர்வதேசப் பிரதிநிதிகளும் குழுமியுள்ளார்கள்.

தலைவர் :—சகோதரர்களே ! உலக அரசியல்களில் உண்மையே உரையா உத்தமப் புருஷர் யாரேனும் உளரா ?

பால்டுவின்:—உளர். அவரே கனம் சர்ச்சில்.

சாஸ்திரியார்:-கனம் தலைவரவர்களே! நம் நண்பர் சொல்வது தப்பிதம். கனம் சர்ச்சில் உண்மையாளர். மருந்துக்குக் கூட ஒருபொய் அவர் வாயினின்றும் வந்தது கிடையாது. ஆனால் புகை வந்திருக்கலாம். அதை நம் நண்பர் பொய் யென நினைத்தார் போலும் !

பால்டுவின் :—(கோபத்தோடு) இல்லை! கனம் இந்திய நண்பர் கூறுவது சுத்த மோசம். பச்சைப் பொய்களை அரசியல்களில் தாராளமாய் வெளியிடுவதில் நிபுணர் நம் சர்ச்சில். அவர் வாக்கில் ஓர் உண்மையாவது யார் வெளிப்படுத்துகிறாரோ அவருக்கு நான் 'பட்லராக" இருக்கத் தயார்.

சாஸ்திரியார்:—நான் அந்தச் சர்ச்சில் துரையிட மிருந்து ஓர் உண்மையை யாவது கிரகியாவிட்டால் உங்கள் ஆங்கில அரசாங்கத்துக்கு இந்தியா அடிமை யாயிருக்கச் சம்மதிக்கிறேன். தவிர சுயராஜ்யம் என்னும் வார்த்தையையும் மறந்து விடுகிறேன். இது சத்தியம்.

தலைவர்:—சரி ! கனம் சாஸ்திரியார் அவர்களே, தாங்கள் சென்று தங்கள் சபதத்தை நிறைவேற்றுங்கள். தங்கள் சமர்த்தைப் பார்க்கலாம்.

(சபை கலைகிறது)

### காட்சி—2

இடம்:—லண்டன். சர்ச்சில் துரை தமது மாளிகையில் சுருட்டுப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார்.

(சாஸ்திரியார் பிரவேசம்)

சர்ச்சில்:—ஹலோ ! குட்மார்னிங், வரணும், வரணும். தங்கள் தயவு எங்களது பாக்யம்.

சாஸ்திரியார்:—எனது அத்யந்த நண்பரான - பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைத் தாங்கும் தூணான தங்களைக்காண மிகச் சந்தோஷம். தங்கள் போன்ற தந்திர சாமர்த்திய சத்ய நிபுணர்களைத் தரிசிப்பது மேலல்லவா ?

சர்ச்சில்:—தாங்களெல்லாரும் எங்களுக்கு உதவியாய் இருக்கும்வரை - எங்களுக்கு யாதொரு குறைவுமில்லை. (புன்னகை ததும்புகிறது.)

சாஸ்திரியார்:—வெள்ளை யறிக்கைச் சீர்திருத்தங்களைப் பற்றித் தங்கள் அபிப்பிராயம் என்ன ?

சர்ச்சில்:—ஓ ! அந்தச் சீர்திருத்தங்களை இந்திய மகாஜனங்கள் அனைவரும் (மிஸ்டர் காந்தியுள்பட) ஒப்புக்கொண்டார்கள். இந்தியக் காங்கரஸ்கூட ஒத்துழைக்க ஆரம்பித்து விட்டது. ஆனால், சீர்திருத்தங்களைச் சிறிதுமாற்றிப் பாதுகாப்புகளை இன்னும் அதிகப்படுத்தி, விசேஷ அதிகாரங்களை விரிவுபடுத்த வேண்டுமென இந்திய மகாஜனங்கள் என்னைக் கேட்டிருக்கிறார்கள். அதற்காகவே நானும் கூச்சல் போடுகிறேன்.

சாஸ்திரியார்:—(பெருமூச்சு விட்டு, தமக்குள்) அப்பப்பா ! ஈதென்ன பெரும்புளுகு-மூட்டையாயிருக்கிறதே! (வெளிப்படையாய்) அப்படியா ! சந்தோஷம். அடுத்த இராஜப்பிரதிநிதியாக யார் வருவார் ?

சர்ச்சில்:—சந்தேகமென்ன ! நானே. புதிய சீர்திருத்தங்களை அமுலில் நடத்த வேறொருவர்க்கும் திறமையில்லை விசேஷப் பாதுகாப்புகளுக்கு வேலை கொடுக்கவே நான் வருகிறேன்.

சாஸ்திரியார்:—ஆயுதப் பரிகாண விஷயமாகத் தங்கள் அபிப்பிராயம் என்ன ?

சர்ச்சில்:—(புன்னகையுடன்) நமது ஏகாதிபத்தியத்தில்தான் ஆயுதப் பரிகாணம் வெற்றிகாமாக நடந்து வருகிறது. உதாரணமாக !உமது-இல்லை-நமது இந்தியாவை எடுத்துக் கொள்ளுங்கள். அரை அடிக்குமேல் கத்தி முதலியவை வைத்திருக்கக் கூடாது. இரண்டொருவர்களிடம் இருந்த லைசென்சுகளையும் ரத்து செய்து, துப்பாக்கிகளையும் பிடுங்கிக் கொண்டோம். (கம்பீரமாக நிமிர்ந்து) ஆ ! நம்மைப் போல ஆயுதப்பரிகாணம் செய்தவர் யார் ? நம் இந்திய தேசத்தைப்போலவே எல்லாத்தேசங்களும்ஆயுதப்பரிகாணம் செய்தால் உலகில் யுத்தத்தையே ஒழித்து விடலாமல்லவா ?

சாஸ்திரியார்:—சரி! இந்தக் காங்கரஸ்காரர்கள் 'சுயராஜ்யம் சுயராஜ்யம்' என்று கூச்சலிடுகிறார்களே அதற்கென் செய்வீர்கள் ?

சர்ச்சில்:—(படபடப்புடன்) சாஸ்திரிகளே! ஏது? உங்களுக்கும் சுயராஜ்யப் பைத்தியம் பிடித்துவிட்டதோ ? இந்தியாவை விட்டு விட்டு நாங்கள் வந்து விட்டால் என்னாகும் தெரியுமா ? ஓரே ரணக்களம். ஸ்பெயின்நிலையே. இந்து முஸ்லிம் சண்டை. ஒவ்வொருவருடைய சொத்து, சுதந்தரம், பெண், பிள்ளை எல்லாருக்கும் ஆபத்து. அதுவுமன்றிப் பக்கத்தில் ஆப்கானிஸ்தானம். ருஷியா, ஜப்பான் முதலிய தேசங்கள் இந்தியாமீது ஓரே பாய்ச்சலாகப் பாய்ந்து கொண்டு போய்விடும்.

சாஸ்திரியார்:—தாங்கள் உண்மையைத் திரித்துக் கூறுகிறீர்கள்.பச்சைப் பொய்.

சர்ச்சில்:—(கோபத்துடன் !) சே ! நாங்கள் எவ்வளவு கஷ்டத்துடன் இந்தியாவைச் சுமந்து பாதுகாத்து வருகிறோம் தெரியுமா ?

சாஸ்திரியார் :— (தமக்குள்) நம் சாமர்த்தியம் பலியாதுபோல் இருக்கிறது. வேறுதந்திரம் செய்வோம். (வெளிப்படையாய்) சரி! நான் சென்று வருகிறேன்.

சர்ச்சில்:—சந்தோஷம்.

### காட்சி—3

இடம்:—லண்டன், இந்திய ஹோட்டல்.

சாஸ்திரியார்:—எனது தபோமகிமையால் ஐரோப்பாவின் இருபெருந் தலைவர்களை வருவிக்கிறேன். ஹிட்லர், முஸோலினி தோன்றுகின்றனர்.

சாஸ்திரியார்:—சர்வாதிகார சிரேஷ்டர்களே ! வரவேண்டுகிறேன் ; வர வேண்டுகிறேன்.

ஹிட்லர், முஸோலினி:—சாஸ்திரியாரவர்களே ! எங்களை ஏன் வரவழைத்தீர்கள் ?

சாஸ்திரியார்:—சர்வாதிகாரப் பெரியோர்களே ! தங்களால் ஆகாத காரியம் ஒன்றுமில்லை. கனம் சர்ச்சில் துரையைச் சத்தியசந்தனாக ஆக்கவேண்டும்.

ஹிட்லரும், முஸோலினியும் ஒருவர்க்கொருவர் பார்த்து நகைத்துக் கொண்டனர்.

ஹிட்லர்:—சாஸ்திரியவர்களே ! அந்தச் சர்ச்சில் சமாச்சாரம் எனக்கு நன்றாகத் தெரியும். நமக்கெல்லாருக்கும் அசையக்கூடிய பேர்வழியல்ல. ஆனால், ஓர் உபாயம் சொல்லுகிறேன். இதோ நாஸிஸம் என்னும் குறுந்தடி. இதைக்கொண்டு மிரட்டி உமது காரியத்தை முடித்துக் கொள்ளும்.

முஸோலினி:— சாஸ்திரிகளே ! இதோ பாஸிஸம் என்னும் ரிவால்வர். நாஸிஸத்தால் முடியாத பட்சத்தில் இதைப் பிரயோகம் செய்யும்.

(இருவரும் மறைதல்)

### காட்சி—4

இடம்:—சர்ச்சில் மாளிகை.

சர்ச்சில் சுருட்டுடன் மாளிகையின் பின்புறமுள்ள பூஞ்சோலையில் உலாவுகிறார்.

(சாஸ்திரியார் பிரவேசம்)

சர்ச்சில்:—வாருங்கள் சாஸ்திரியவர்களே.

சாஸ்திரியார்:—(திடீரென நாஸித் தடியை எடுத்துத் தலைக்குமேல் நீட்டி) நீர் ஓர் உண்மை சொல்லவேண்டும். இல்லா விட்டால் உம் மண்டையைப் பிளந்து விடுவேன்.

சர்ச்சில் :—(கலவரமில்லாமல் சாவதானமாகச் சிரித்துக் கொண்டே) ஓ ! ஹோ !! ஹிட்லர் நாஸிஸமா ? இத்தடி ஜெர்மெனியில் பிரயோகிக்கப் பட்டு உடைந்துபோன தடியல்லவா ? உமது மிரட்டுப் பலியாது. இது என்னை ஒன்றும் செய்யாது.

சாஸ்திரியார்:— (சர்ச்சில் தலையில் ஓங்கி யடிக்கிறார். தடி தொப்பியில் பட்டுத் தூள் தூளாகப்போய்விடுகிறது. சர்ச்சில் புன்னகை கொள்கிறார்.

சாஸ்திரிகள் ஆச்சிரியத்துடன்ஸ்தம்பித்து மறுவினாடியே பாஸிஸ ரிவால்வரை எடுத்துச் சர்ச்சில் முகத்துக்கு நேரே நீட்டினார்.

சர்ச்சில்:— (ஹா ! ஹா ! எனச் சிரித்து) ஓ ! கோ !! முஸோலினியின் ரிவால்வரா ? இந்த ஓட்டை ரிவால்வரைக்கொண்டு என்னைப் பயமுறுத்தவா பார்க்கிறீர் ?

சாஸ்திரியார்:— உண்மை ஒன்று சொல்கிறீரா ? இல்லையா ?

சர்ச்சில்:—என்னை என்ன சொல்லச் சொல்கிறீர் ?

(புன்னகை ததும்புகிறது)

சாஸ்திரியார்:— தாங்கள் வெள்ளை யறிக்கையை எதிர்ப்பதின் இரகசியமென்ன ?

சர்ச்சில்:—இந்தியாவின் நன்மைக்கு.

சாஸ்திரியார்:—பொய் ! பொய் !! பச்சைப் பொய்!!! பிரிட்டிஷாரின் நன்மைக்காகவே. இப்பொழுதாவது ஒப்புக்கொள்ளுகிறீரா ? உயிரிழக்கிறீரா ?

சர்ச்சில்:—முடியாது.

சாஸ்திரிகள்:—முடியாதா ? இதோ பார், அடுத்த நிமிஷம் சவமாகிறாய். (சுடுகிறார்) வெறும் சப்தமே கேட்டது. சர்ச்சில் கலகல வென நகைக்கிறார்.

(சாஸ்திரியார் மறைகிறார்)

### காட்சி—5

இடம்:—பொது நந்தவனம்.

(ஒரு பெஞ்சியின் மீது சாஸ்திரியார் விசனமாக உட்கார்ந்திருக்கிறார். (மனதுக்குள்) நம்முயற்சிகள் வீணாயினவே? இந்தச் சர்ச்சிலை வசப்படுத்த யாதொரு வழியும் காணவில்லையே ! (மௌனம்) ஆ! ஒரு யோசனை உதயமாகிறது. ருஷியாவைக் கண்டால் எல்லாருக்கும் கொஞ்சம் நடுக்கம். போல்ஷ்விக் பூச்சாண்டிக்குச் சர்ச்சில் குழந்தை பயப்பட்டே தீரும். ஆதலால் சமதர்ம உலகில் ஆவி வடிவா யிலங்கும் லெனினைப் (பிரார்த்திக்கிறேன்)

(லெனின் பிரசன்னமாகிறார்)

சாஸ்திரியார்:—(பயந்து குழறி) சமதர்ம வீரரான பெரியோரே.

லெனின்:—சட், நான் பெரியாரல்ல. பெரியார் என்றால் சிறியார் என்ற உணர்ச்சி ஏற்படும். இது சமதர்ம மல்லவோ.

சாஸ்திரியார்:—மன்னிக்கவும் ! தோழரே !! கனம் சர்ச்சில் அவர்களை ஓர் உண்மையாவது பேசச்செய்தல் வேண்டும். இல்லாவிடில் என் சபதம் நிறைவேறாது ; நான் தோல்வி யுறுவேன். தயவு செய்யுங்கள்.

லெனின்:—தோழரே ! அஞ்சேல் ! இதோ ! பொதுவுடைமை வீரவாள். இவ்வாளால்தான், உலகத்தில் சமதர்மத்தையும், சாந்தியையும், சமாதானத்தையும், சகோதரத்வத்தையும் சத்தியத்தையும் நிலவச் செய்ய முடியும். ஆனால் இதன் தன்மையறியாதுஎல்லாத் தேசங்களும் நடுங்குகின்றன. இதைத் தருகிறேன். ஆனால், இந்த வாளை உபயோகிக்க உமக்குச்சக்தி இல்லை. இருப்பினும் பத்து நிமிடம் இவ்வாளை உபயோகிக்கப் பலம் கொடுத்திருக்கிறேன். அதற்குள் உமது கோரிக்கையை நிறைவேற்றிக் கொள்ளுங்கள். எச்சரிக்கை. நான் சென்று வருகிறேன்.

(வானவெளியில் லெனின் மறைகிறார்)

### காட்சி—6

இடம்:—சர்ச்சில் மாளிகையில் மேல் மாடி.

(சர்ச்சில் தேனீர்ப்பானம் அருந்தி விட்டுச் சுருட்டுப் பிடித்துக்கொண்டே உலாவுகிறார். (சாஸ்திரியார் பிரவேசம்.)

சர்ச்சில்:— (புன்னகையுடன்) சாஸ்திரியாரே ! ஏது என்னை விடமாட்டீர் போலிருக்கிறது!

சாஸ்திரியார் :—நீங்கள் ஓர் உண்மை மட்டும் சொன்னால் போதும், உமது தாசானு தாசனாய் நடந்து கொள்ளுகிறேன். இல்லா விடில்..........

சர்ச்சில்:—ஓ ! இன்னும் என்னைப் பயமுறுத்தப் பார்க்கிறீரா ? அது ஒன்றும் பலியாது. எங்கள் ஜீவநாடியான இந்தியாவை இழப்பினும் சரி, ஆனால் ஓர் உண்மைமட்டும் என்னிட மிருந்து வாராது.

சாஸ்திரியார்:— வாராதா! இதோ! உன்னை என்ன செய்கிறேன் பார். (கோபத்துடன் வாளை உருவுகிறார்).

சர்ச்சில்: —(பயத்துடன்) ஆ !போல்ஷ்விக் வாளா !! அந்தோ ! (என நடுங்கினார் ; அலறினார்).

சாஸ்திரியார்:—இனியாவது ஒருசத்ய வசனம் உரைக்கிறீரா ?

சர்ச்சில்:— (மனதுக்குள்) ஐயோ ! அந்த நாசமாய்ப் போன ருஷியாவின் பொதுவுடைமை வாளை ஏந்தியல்லவோ பயமுறுத்துகிறார். இனி என்செய்வது? ஆனால் இவ்வாளை உபயோகிக்க இவருக்குத் திறமை இருக்குமா? பார்க்கலாம். (வெளிப்படையாக) மிதவாத சிரோமணியான உமக்கு இப்பொதுவுடைமை வாள் எதற்கு ? வேண்டாம். நீங்கள் நல்ல பிள்ளை ஆயிற்றே. அவ்வாளை எறிந்து விடுங்கள். உங்கள் சொற்படி கேட்கிறேன். இந்தப் பொதுவுடைமை வாள் நம் இருவரின் கழுத்துக்கே கத்தியாக வந்து சேரும் ; ஜாக்கிரதை.

சாஸ்திரியார்:— இந்தக் கதையெல்லாம் அளக்க வேண்டாம். ஓர் உண்மை சொல்லிவிடும்.

சர்ச்சில்:-நீர்,பொதுவுடைமை வாதி.

சாஸ்திரியார்:—அல்ல;நான்மிதவாதி.

சர்ச்சில்:— இந்தியா சுயராஜ்யத்துக்கு லாயக்கில்லை.

சாஸ்திரியார்:— பொய் ! பச்சைப் பொய் !! இந்தியாவிலே சுயராஜ்ய அரசாங்கத்தை நடத்த ஏராளமான மேதாவிகள் உண்டு. கனம் சாப்ரூ, ஜயகர், சிந்தாமணி, ஹிதாயத்துல்லா, ஊஸ்மான், ஷண்முகம், இராமசாமி அய்யர், பன்னீர் செல்வம் முதலான மிதவாத சிரோமணிகள் எவ்வளவு மேதாவிகள் தெரியுமா ? ஏன் என்னைப்பற்றித் தாங்கள் நன்கு அறிவீர்கள், கனம் சாஸ்திரியார் என்றால் உலகமே அறியும். எனக்கு வைஸ்ராய் பதவி மட்டும் கிடைக்கட்டும். (வாயில் நீர் சுரக்கிறது) என்ன திறமையாக நிர்வாகம் புரிவேன் தெரியுமா ?

சர்ச்சில்:—ஏன் காங்கரஸ் வாதிகள் ?

சாஸ்திரியார்:—அவர்களிலும்,ஜவஹர்லால், நரிமன், புலாபாய், இராஜேந்திர பிரசாத், பிரகாசம், சத்திய மூர்த்தி, முத்துரங்கம், சரோஜினி முதலிய பல்லோர் அரசியலை நிர்வகிக்கத் திறமையில்லாமலா சுயராஜ்யம் கேட்கிறார்கள் ?

சர்ச்சில் :— இன்னும் யாராவதுண்டா ?

சாஸ்திரியார்:—ஆம் ! சுயேச்சை வாதிகள், இவர்களும் நிர்வாகத் திறமையுள்ளவர்கள் தாம். ஜார்ஜ் ஜோஸப், ராதா பாய், ஹரி விலாச சாரதா, எம். சி. ராஜா, அம்பேத்கார், மாளவியாஜி முதலான திறமைசாலிகள் எவ்வளவு ஒழுங்காக ஆளுவார்கள் தெரியுமா ? இவர்கள் அரசியல் துறையில் அசகாய சூரர்கள்.

சர்ச்சில்:—வைதிக வாதிகளிலோ ?

சாஸ்திரியார்:— ஓ! பாய் பரமானந்தா, மூஞ்சே முதலான வீரர்கள் உண்டு.

(15-ம் பக்கம் பார்க்க)

வந்தேமாதரம்

# நவசக்தி

"என்கடன் பணிசெய்து கிடப்பதே"

சிலம்பு கரு | தாதுஹூ ஐப்பசிமீ கசஉ (30—10—1936) வெள்ளிக்கிழமை | பரல் உசு

## புலாலுண்ணுஞ் செடிகள்

(ஸ்ரீமத். வே. நரசிம்ம ஐயங்காரவர்கள், எம்.ஏ.,பி.எல்.)

ஜீவப் பிராணிகளானவை ஊனைத் தின்று தம்மூனைப் பெருக்கா நிற்கத் தாவரங்களோ அத்தகைய பாவத்திற்குள்ளாகாமல் தமதுணவை மண்ணின் கீழ்க் கிடக்கும் ஜலத்தினின்றும், பற்பல உப்புக்களினின்றும் சேகரித்துக் கொள்ளும். ஆயினும் இப் பொது விதிக்குச் சிறப்பு விதி யொன்றுளது. ஜீவப் பிராணிகளுக்குள் புலாலுண்ணு நோன்பு கைக்கொண்டு தாவரங்களையே புசித்துச் சீவிப்பன ஆடு, மாடு, குதிரைபோன்ற சில மிருகங்களே. அதுபோலவே தாவரங்களுக்குள் மண்ணிற் கலந்திருக்கும் உப்புக்களை நீக்கி மாமிசத்தையே யுண்ணுஞ் சில செடிகளுண்டு. இச் சிறப்பு விதிக்குக் காரணமாய்ச் செடிகளுக்குப் புலாலுண்ணுஞ் செடிகளென்று பெயர் கொடுத்தழைப்போம். இவற்றிற்கே, ஸ்ரீமான் அரங்காசாரியரால் இயற்றப்பட்டு வெளிப் போந்த "தாவர நூல்" என்னும் கிரந்தத்துள் (பக்கம் - 240) "கீடகபக்ஷண ஓஷதிகள்" என்ற பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. அப் பெயரெம்போன்ற தமிழர் நாவால்இசைத்தற்பாலது மன்று ; அதன் பொருள் எளிதில் அறிதற் பாலதுமன்று. இக் காரணம் பற்றியே எம்மாற் கூடியதொரு தமிழ்ப் பெயர் கொடுத்தனம். இச்செடிகள் மிகவரிதாயும் இவ்வுலகத்துத் தேசங்கள் சிலவற்றில் ஒவ்வோரிடத்திலுமே அகப்படுவனவாயு மிருக்கின்றன. இவற்றுக்கும் மற்றச் செடிகொடிகளுக்கு முள்ள வித்தியாசம் உணவு உட்கொள்வதிலேயே யாகும். முன் சொன்னபடி மற்றச் செடிகள் தமது வாழ்க்கைக்கு வேண்டிய ஆகாரப் பொருள்களை, ஆகாயத்தினின்றும்,பூமியின்கண் மறைந்திருக்கும் நீரினின்றும், பற்பல உப்புக்களினின்றும் சேகரித்து உபயோகப்படுத்திக் கொள்ள, புலாலுண்ணுஞ் செடிகளோ புழு, பூச்சி முதலிய சிறுபிராணிகளைத் தாங் கொண்ட சில சாதனங்களாற் பிடித்து அவற்றைத் தீனியாக்கிக் கொள்ளும். அவற்றிற் சிலவற்றைக் குறித்து இங்குச் சில சொல்லுவோம்.

நாம் நம்மைச்சுற்றிலும் உற்று நோக்க, இயற்கையமைப்பில் சில பிராணிகள் வேறுசில பிராணிகளைக் கொன்று தமக்கிரையாக்கவும், அங்ஙனங்கொல்லுவதற்குச் சாதனமாகப் பற்களையும், கொம்புகளையும், நகங்களையும், விஷத்தையும், அப்பிராணிகள் கொண்டிருப்பதையும், அவை யொன்றோடொன்று எதிர்க்குங் கால் உண்டாகும் கோபாவேசத்தையும், தைரியத்தையும், தீராப் பகையையும் ஐயவொலியையும், தோல்வி யழுகையையுங்கண்டுங் கேட்டுமிருப்போம். ஆகவே, ஜீவப்பிராணிகளுக்குள்ளே யே இத்தகைய சம்பவங்கள் நேரிடுகின்றனவென்று நினைக்கலாகாது. இதுபோலவே,தாவரங்களுக்குள்ளும்ஐயப்போர் நடக்கின்றது. அதை நடத்துவது புலாலுண்ணுஞ் செடிகளே. பார்க்குச் சாதுபோல் வேடம்பூண்டு, குணத்திலுஞ் செய்கைகளிலும் புலிபோல்வன இச்செடிகளே. சில குளங்களிலும் குட்டைகளிலும் தண்ணீரின் மேல் மிதந்து கொண்டு வசிக்கின்றது "நீர்ப்பைச் செடி" (Bladder-worts) என்னும் ஓரற்பச் செடி. அந்தோ! ஆனால் அது செய்யும் மோசம் யாவரேயறிவர் ? பொன்னிறம் போன்ற மலர்களைக்கொண்டு சிலகிளைகள் தண்ணீரின்மேற் றலைதூக்கி நிற்கும். தண்ணீரின் கீழ்ப் பல கிளைகள் ஓட, அவற்றினிடையிடையே சிறுசிறு நீர்ப்பைகள் தோன்றும். இந்நீர்ப்பைகளே இச்செடி சிறு பிராணிகளைப் பிடிக்க விரிக்கும்வலைகளாம். தண்ணீரில் அங்குமிங்குமுலவுஞ் சிறியபூச்சிகள் புழுக்கள் திறந்திருக்குமிப் பைகளுள் நுழையவே, அவை திரும்பி வெளிவாராவண்ணம் அப்பைகள் மூடிக் கொள்ளும். முதற்சென்ற பூச்சிகளின் நிலைமையறியா மற்றப்பூச்சிகள், அப்பைகளுள் ஏதோ அமிர்தமிருப்பதாக வெண்ணித் தாமும் நுழைய, எல்லாவற்றையும் அச்செடி பைகளிலுண்டாம் ஒருவகைத் திராவகத்தால் நீர்போலாக்கி உறிஞ்சிவிடும்.

"ட்ரோஸீரா" (Drocera) என்னும் பேர்கொண்ட சிறு செடியொன்று சற்று ஈரமான இடங்களில் முளைத்திருக்கும். அதைப் பார்ப்போர், அதற்கு ஜீவப் பிராணிகளைப் பிடித்துத் தின்னுந் திறமுளதோவென்று வியப்படைவார். எனினும், அதன் சக்தி, அதனால் உயிர்நீத்த ஈ, கொசு முதலிய கணக்கற்ற சிற்றுயிர்கட்கே தெரியும்! அச்செடியின் இலைகள் நீண்ட உரோமங் கொண்டவை. இலையின் நுனியில் ஒருவகை இரஸம் உற்பத்தியாய்க்கொண்டேயிருக்க, அதைத் தேனென்று நம்பி உண்பதற்குச் சிறு பூச்சிகள் நெருங்கி இலையின்மேல் உட்காரும், அந்தோ! இதுவரையில் நேராய் நிமிர்ந்துநின்ற உரோமங்களெல்லாம் ஒவ்வொன்றாய் வளைந்து, தமக்கு அதிர்ஷ்ட வசத்தால் வாய்த்த இரையை இறுக்கி மூடிக்கொள்ளும். பூச்சியோ, "வெளுத்த வெல்லாம் பாலென்று நம்பி, இங்கு வந்து அகப்பட்டுக் கொண்டோமே ! தப்பிப் பிழைப்போம்" என்று தன் சிறகுகளையும் கால்களையும் படபடவென்றடித்துச் சண்டை செய்யச்செய்ய உரோமங்கள் சிறிதேனும் பின் வாங்காது இரையை இறுக்கி இறுக்கி நசுக்கும் ; பூச்சியும் மாண்டுபோய் நீர்உருவமாய்மாறச் செடி யுண்ணினும். "தும்பி" என்றும், "தட்டாரப் பூச்சி" என்றும் பேர் கொண்ட பெரும் பிராணிகள் சிற்சில சமயத்து அகப்பட்டாலு மகப்படும். அப்பெரு விருந்தைப் பிடிக்கப் பல இலைகள் ஒன்றாய்ச் சேர்ந்து அதற்கு எமனாகும். இவ் வகுப்பிற் சேர்ந்த இரண்டுவகைச் செடிகள், ஸ்ரீமான் - அரங்காசாரியார் புத்தகத்துப் படங்களுடன் விவரிக்கப்பட்டிருக்கின்றன. இவையும், மேற்சொன்ன நீர்ப் பைச் செடியும் தென்னிந்தியாவி லகப்படுகின்றன. இனி விவரிக்கப்படுஞ் செடிகள் இத் தென்னிந்தியாவிலில்லை.

வட அமெரிக்காவில் "மோகினிப் பொறி" (Venus's fly-trap) என்ற பெயர்கொண்ட செடியொன்றுளது. அதன் இலைகளின் ஓரமெல்லாம் பற்கள்போன்ற முட்களாகேகங்கொண்டிருக்கும். இத்தகைய இலைகளை நன்றாய் விரித்துக் கவந்தனைப்போலிரைக்குக் காத்திருக்கும். ஈ போன்ற பறக்குஞ் சிறு பூச்சிகள் இலைகளுக்கு இருபுறமுமிருக்கும் மிகச்சிவந்த நிறங்கொண்ட சிறு கோளங்களால் கவரப்பட்டு, அணுகி இலையின் மேலுட்கார, இலையின்பற்கள் திடீரென்று மூடி ஒன்றோடொன்று பின்னிக்கொள்ளவே, அகப்பட்ட பூச்சியைச் செடியானது சாவகாசமாய்ச் சீரணிக்கவாரம்பிக்கும் ; சிலசமயத்துப்பெரு இரை அகப்படின், அதையுட் கொள்ள இரண்டொருவாரமும் பிடிக்குமாம். அவ்விரை சீரணமானபிறகு முட்கள் ஒவ்வொன்றாய்ப் பிரிந்து முன்போல "வருகிறவர்கள் வரலாம்" எனவுபசாரஞ் செய்வன போல் கையைவிரித்து நிற்கும்.

"லோட்டாச்செடி" (Pitcher - plant) என்ற சாதாரணப்பெயர் கொண்டதும் "நிபந்திஸ்" (Nepan this) எனச்சாஸ்திரப்பெயர் கொண்டதுமான ஒருசெடி உஷ்ணப்பிரதேசங்களில் வளர்கின்றது. அதற்கு அப் பெயர் வந்ததற்குக்காரணம், அதன் இலையின் நுனியில் "லோட்டா"ப்போல் ஓரங்கந்தொங்கும். சிற்சில செடிகளில் அக்கோப்பைகள் ஓரடிநீளமாகவுமிருக்கும். அக்கோப்பையின் வாயை மூடுவதற்கு ஒரு மூடியுமுண்டு. அக்கோப்பையின் வாயைச்சுற்றித் தேன் சுரந்து கொண்டேயிருக்கும். அத்தேனை விரும்பிப் பூச்சிகள் அருகிற்போகத்தவறிக் கோப்பைக்குள் விழுந்துவிடும். பின்பு திரும்பி வெளியேறமுடியாது ; ஏனெனில், கோப்பையின்மூடி உட்புறம் போவதற்கு மாத்திரமே வழிதிறக்குமேயொழிய, உட்போனது வெளிவர வழிதிறவாது. அக்கோப்பையினடியில் தண்ணீரும், அதிற்கரைந்த ஒரு திராவகமுமிருக்கும்; அதில்விழுந்து பூச்சிகளிறக்கும். இங்ஙனம் மோசஞ் செய்து கைப்பற்றிய இரையைச் சிலசமயங்களில் செடியானது இழந்துவிடுவதுமுண்டு. அக்கோப்பைக்குள் இனிய தீனி விழுந்துகிடப்பதைக்கண்ட கூரிய பார்வைகொண்ட சிலபறவைகள் அந்த "லோட்டா"வைக்குத்தி அதனுள்ளிருக்குமிரையைத் தின்றுவிடும்.

புலாலுண்ணுஞ் செடிகள் இங்ஙனம் அற்பப் பூச்சிகளை மட்டும் பிடித்துண்டு களிப்பதில்லை ; பெரிய வேறு பிராணிகளையுங் கொல்லும். மத்திய அமெரிக்காவில் நிக்காருகுவா என்றொரு ஜில்லா உளது. அங்கு "சாத்தான் வலை" (Devil's noose) என்றொரு செடி யுண்டு. அது தனது கறுத்தும், நீண்டும், பிசின்கொண்டுமிருக்கிற கிளைகளால் நாய் முதலிய பிராணிகளையும் பிடித்துக் கொல்லும். மனிதர்கள் யாரேனுங் கண்டு அப்பிராணியை விடுவித்தாலொழிய, அது பிழைப்பதற்குப் பின்னேது ஒன்றுமிலது. சுமத்ரா என்னுந் தீவாந்திரத்தில் ஒருவகை அல்லிச்செடி யுண்டு. அது எந்நேரமும் ஒருவித நாற்றம் வெளிவிடும். அத்துர்க்கந்தத்தை மோந்து பார்க்கும் பக்ஷிகளும் மிருகங்களும் தக்ஷணமே உயிர் நீங்குமாம். நமது புராணங்களிற் சொல்லப்பட்டிருக்கும் நச்சு மரம் போலும் இவ் வல்லிச்செடி.

—"செந்தமிழ்"

## தமிழ்நாடு காங்கரஸ் கமிட்டித் தேர்தல்கள்

### தலைமைப் பதவி

வேதாரணியம் நகர காங்கரஸ் கமிட்டிக் காரியதரிசி திரு. பெ. ம. அப்பையாதேவர் எழுதுகிறார் :—

தமிழ்நாடு காங்கரஸ் கமிட்டித் தேர்தல் சமீபித்துவிட்டது. சென்ற ஆண்டு இக்கமிட்டியின் தேர்தல் காரைக்குடியில் நடைபெற்றபோது ஏற்பட்ட கொந்தளிப்பு இன்னும் தமிழ்நாட்டில் அடங்கவில்லை. இதற்கிடையில் அடுத்த தேர்தலும் அடுத்தமாதம் வேலூரில் நடக்கப்போகிறது. இந்தத்தேர்தலில் தமிழ்நாடு காங்கரஸ்கமிட்டித்தலைவராக யார் வரப்போகிறார் என்கிற விஷயத்தில் இப்பொழுதே தமிழ்நாட்டில் பரபரப்பு ஏற்பட்டிருக்கிறது. இவ்வருஷம் மாகாணக் கமிட்டி அங்கத்தவர்களைத் தேர்ந்தெடுக்கப்போகிறவர்கள் யாரைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்போகிறார்கள் என்பது முக்கிய விஷயம்.

இந்த நிலைமையில் திரு. சத்தியமூர்த்தி மறுபடியும் தலைவராக இருக்க விரும்புவாரா? அல்லது தாம் கௌரவமாக ஒதுங்கிக்கொண்டு தமது சகஊழியர்களுக்கும் ஒரு சந்தர்ப்பம் அளித்து அவர்களுடன் ஒத்துழைக்க விரும்புவாரா என்பதும் தெளிவாதல் வேண்டும். பிந்திய முறையைக் கையாள்வாரானல் திரு. சத்தியமூர்த்தியின் பெருமை தமிழ்நாட்டில் உயரும்; முந்தியமுறையைப் பிடிவாதமாகக்கையாள நினைத்தால் அந்நிலை விசனிக்கத்தக்கதாகும். தமிழ்நாடும் மற்றொரு வங்காளமாகிவிடும். இந்நிலைக்குத் திரு. சத்தியமூர்த்தி இடந்தரமாட்டார் என்றே நம்புகிறோம்.

மாகாணக் கமிட்டி அங்கத்தவர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு பல ஜில்லாக்களிலிருந்தும் வரும் அங்கத்தினர்களில் பலர் திரு. சத்தியமூர்த்தியை ஆதரிக்கலாம். ஆனல் இது தமிழ்நாட்டின் பொதுஜன அபிப்பிராயமாகாது. பொதுஜன அபிப்பிராயம் வேறு விதமாக இருப்பதற்குப் பல காரணங்களுண்டு.

(1) சென்ற 1924-ம் வருஷம் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் தலைமையில் நடந்த காஞ்சிபுரம் மகா நாட்டிற்குப் பிறகு 12 வருஷ காலமாகத்தமிழ் நாடு காங்கரஸ் கமிட்டித்தலைவர் பதவி இந்த மாகாணத்தின் 100-க்கு 97 பேர் உள்ள பெரும்பான்மை வகுப்பாளரான பிராமண ரல்லாதாருக்கு (ஒரு சிலமாதம் திரு. முத்துரங்க முதலியார் ஆக்டிங் தலைவராக இருந்ததைத் தவிர) வேறு எவருக்கும் அளிக்கப்படவேயில்லை. இம்மாதிரி எழுதுவதின் மூலம் என்னை வகுப்புவாதி என்ற படுகுழியில் தள்ளி என் வியாசத்திற்கு மதிப்பில்லாமற் செய்துவிடாதீர்கள். தமிழ்நாட்டில் மிளிர்ந்து வரும்இவ்வகுப்பு வாதத்திற்குச் சந்தர்ப்பம் அளியாமலிருக்கவே நான் இவ்வியாசம் எழுதப்புகுந்தேன். அகில இந்திய காங்கரஸில்கூட இம்மாதிரி வகுப்பு வாதங்கள் நுழைந்து விடக்கூடாதென்பதற்காகவே பல மாகாணங்களிலிருந்தும் ஹிந்து, முஸ்லீம், சீக்கிய, பார்ஸி போன்ற பலவகுப்பாரில் ஒருவரை வருஷந்தோறும் தலைவராகத் தேர்ந்தெடுத்து வருகின்றனர். இந்த முறையை நம் மாகாணக் கமிட்டியும் பின்பற்றுமேயானல் தகராறுகளுக்கு இடமிராது. 12 வருஷ காலமாகப் பொறுத்திருந்த ஒரு சமூகத்தினரின் பொறுமையை இன்னமும் சோதிக்கத் திரு. சத்தியமூர்த்தி முன்வரமாட்டார் என்றே நம்புகிறேன்.

திரு. சத்தியமூர்த்தி அவர்கள் தலைமைப் பதவி ஏற்றது முதல் அவர் அரும்பாடு பட்டு இராப்பகல் ஓய்வில்லாமல் வேலைசெய்வதை யாரும் மறுக்க முடியாது. ஆனல் அவர் பேரில் குறை கூறுவதற்கு மட்டும் அளவே கிடையாது. அதிலும் இந்த ஒருவருஷகாலமாகத் தமிழ் நாடு காங்கிரஸ் தலைவர் பேரிலும் நிர்வாகக் கமிட்டி பேரிலும் கூறப்பட பழி எந்தக் காலத்திலும் இம்மாதிரி கூறப்பட்டிரா தென்றே கூறவேண்டும். ஏன்? தேர்தல் காலமல்லவா? "கோர்ட் வழக்கில் தோற்றுப் போனவன் நீதிபதியை வைவது போல"த் தேர்தலில் தேர்ந்தெடுக்கப் படாதவர் குறை கூறுவது சகஜம். இதைப் பொருள்படுத்த முடியாது. ஆனல் தேர்தல் பிசாசு, பணத்தை ஒட்டாஞ் சல்லிபோல் ஆயிரக்கணக்கான ரூபாய்களை அள்ளி இறைக்கும் மனேவேகத்தை உண்டாக்கக்கூடியது.

இந்த விஷயத்தில் சந்தேகத்திற்கு அப்பால் பட்ட ஒருவரே பொறுப்பு வாய்ந்த தலைமைப் பதவியை வகிக்க வேண்டும் என்பதை உணர்ந்து தமிழ் நாட்டில் தோன்றி யிருக்கும் மனக் கசப்பை வேரூன்றுதபடிசெய்து, வரப் போகும் தேர்தலில் மாகாணக் கமிட்டி அங்கத்தினர்கள் புத்திசாலித்தனமாக நடந்து கொள்வார்களென்று எதிர்பார்க்கப்படுகிறார்கள்.

# எதிரொலி

### கறுப்புக் கோடிகள்

பண்டித ஜவஹர்லால் நேரு நாகப் பட்டினத்துக்கு விஜயம் செய்தபோது கறுப்புக்கொடி ஊர்வலம் ஒன்று நடந்தது. அதுபற்றி அவர் கோபங் கொண்டார். "நான் கறுப்புக் கொடிகளைக் கண்டு பயப்படமாட்டேன். இயந்திரத் துப்பாக்கியைக் கண்டும் ஓடாதவன் நான்" என்று அவர் கூறினார். இப்படிப்பட்டஊர்வலத்தில்கலந்து கொண்டவர்கள் காங்கரஸுக்கு விரோதிகளென்றும், அவர்களோடு இறுதிவரைத் தாம் போராடப்போவதாகவும் பேசினர். இவ்வாறு ஒரு மாபெருந் தலைவரைக் கோபிக்கச் செய்வதும் போற்றுதற்குரியதன்று.

இக் கறுப்புக்கொடி ஊர்வலம் முதலில் காங்கரஸாலேயே துவக்கப்பட்டது. சைமன் கமிஷன் இந்தியாவுக்கு வந்தபோது "சைமனே திரும்பிப்போ" என்று ஐம்பதாயிரம் பேர் கூவினர். அவர்களைப் பின்பற்றிப் பின்பாட்டுப் பாடுவதுபோல ஆயிரம் கறுப்புக் கொடிகள் ஊர்வலமாகப் புறப்பட்டன. அப் போக்கையே இப்போதும் சிலர் கைப்பற்றுகின்றனர். அதனல் கறுப்புக்கொடி ஊர்வலங்களை நிறுத்தவேண்டுவது அவசியமாகும். இது காங்கரஸிலிருந்தே பிறத்தல் வேண்டும். இதுபற்றித் திரு. நேரு உழைப்பாராக.

—"தி ஹிதவாதா"

### இராஜப் பிரதிநிதியிடம் தூது

பாலஸ்தீன நிலைமை பற்றி இராஜப் பிரதிநிதியைப் பேட்டி கண்ட பிரபல முஸ்லிம்களின் தூதுகோஷ்டிக்கு அவரளித்த பதில், பிரிட்டிஷாரின் கொள்கை பற்றி ஏற்பட்டுள்ள தப்பிப் பிராயங்களைப் போக்கும். யூதர்களின் குடியேற்றத்தால் பாலஸ்தீன அராபியர் பொருளாதார நன்மைகளை அடைகிறாரென்றும் கூறினர்; எகிப்து, ஈராக் டிரான்ஸ்ஜோர்தன், ஸாடி, அரேபியா முதலிய விடங்களில் பிரிட்டிஷார் கைக்கொண்டுள்ள கொள்கையைக் குறிப்பிட்டுக் காண்பித்தார். அராபியரின் ஆவல்களோடிசைக்கவே இவ்விதம் நடைபெறுவதாகக் கூறப்பட்டதற்கு அவர் அராபியரின் பாதுகாப்புக்கு 'யூதர் தேசிய விடுதி'யின் கொள்கைகள் பொருந்தாதவை யல்லவென்று சொன்னர்; பாலஸ்தீனத்தில் அமைதியை நிலைநாட்டுவதும் ராயல் கமிஷனின் விசாரணையைக் கவனிப்பதும் தனிப்பட்ட விஷயங்கள் என்றும் கூறினர்; இந்தச் சச்சரவுக் காலத்தில் இந்திய அரசாங்கம் முஸ்லிம் உணர்ச்சியுடனேயே பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் நெருங்கி வந்ததாகவும் சொன்னர். இராஜப்பிரதிநிதியின் இத்தகைய அறிக்கைக்குப் பிறகும் பிரிட்டிஷ் கொள்கையைப் பற்றிய தப்பபிப்பிராயங்கள் வேண்டுவதில்லை. ஆகவே குறைப்பேச்சுகளுக்கு இனி இடமில்லை.

—"லீடர்"

### ஒரிஸா தலைநகரம்

ஒரிஸா தலைநகரக் கமிட்டி பொதுமக்களின் எண்ணத்துக்கு விரோதமாகக் கட்டாக் நகரையே தலைநகராக்கச் சிபார்சு செய்துளது. ரங்கைலுண்டா என்ற சரித்திர சம்பந்தமான இடத்தைத் தலைநகராக்காததுபற்றி பொது மக்கள் அதிருப்தி கொள்வது இயற்கையே. தலைநகரத் தேர்தல் கமிட்டியின் தீர்ப்பே முதன்மையானது. அரசாங்கம் கட்டாக் நகரையே தலைநகராக்குவதென முடிவுகட்டியுள்ளது. அரசாங்கத்தின் இம்மாறுதலான கொள்கையைக் கண்டிக்கக் கட்டாக்கில், கறுப்புக் கொடி ஊர்வலங்களும், 'ஹர்த்தால்'களும் பகிஷ்காரங்களும் நடைபெறுகின்றன. இவ்விதக் கிளர்ச்சியால் பெருங் கலகமுண்டாகுமே தவிர நன்மை விளையாது.

—"ஸ்டேட்ஸ்மென்"

### காங்கரஸும் தேர்தல்களும்

சட்ட சபைகளைக் கைப்பற்றிக்கொள்ளுவதன் மூலமாகவே நாம் சுதந்திரம் அடையமுடியாதெனப் பண்டித ஜவஹர் தம் தேர்தல் பிரசாரத்தில் கூறினர். சட்டசபைகளி னின்றும் தேசத்துரோகிகளைத் தூரத்தவே காங்கரஸ் சட்டசபைகளைக் கைப்பற்ற முனைந்து நிற்கிறது. காங்கரஸின் இக் கொள்கையை நாம் மனப்பூர்வமாக ஆதரிக்கிறோம். ஒரே ஒரு விஷயத்திலன்றி நாம் காங்கரஸில் எவ்விதக் குற்றத்தையும் காண்கிறோமில்லை. வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தை மறுத்துப் பேசுவதில் அஹிம்ஸா முறையைக் காங்கரஸ் ஆதரிப்பதையே நாம் கண்டிக்கிறோம்.

—"மாடர்ன் ரெவ்யூ"

### புதுக்கோட்டையும் ஜவஹரும்

வட இந்தியாவில் இருப்பவர் புதுக்கோட்டை சமஸ்தானத்தை அறியார். புதுக்கோட்டை சமஸ்தானத்தைப் பற்றி இந்தியா முழுவதும் அறியச் சந்தர்ப்பம் தந்ததுபற்றிச் சமஸ்தான அதிகாரிகளுக்கு நமது வந்தனத்தைச் செலுத்துகிறோம். இது என்றும் மறக்கமுடியாத செய்கையாகும். ஜவஹர் சென்ற பாதை முழுவதும் அவர்கள் இராணுவத்தை வரிசையாக நிறுத்திப் பந்தோபஸ்து செய்தார்கள். காங்கரஸ் தலைவரோடு சமஸ்தான மக்கள் கலந்து உறவாடக்கூடாதென்பதே அவர்தம் நோக்கம். இதில் எவ்வாறு வெற்றிபெற முடியும்? செய்யத்தகாத செய்கை பொது மக்களின் கவனத்தை ஈர்ப்பது இயற்கையன்றோ?

—"பெடரேட்டெட் இந்தியா"

### இந்தியக் கப்பல் மார்க்கம்

இந்தியாவுக்கும் ஐரோப்பாவுக்கும் இடையே பிரயாணிகளை ஏற்றிச்செல்லவும் சமான்களைக்கொண்டு செல்லவும் இந்தியக்கப்பல் கம்பெனியொன்று இந்திய மூலதனத்தைக்கொண்டே நடத்த வேண்டுவது அவசியமாகும். இம்மாதிரியான கம்பெனிக்கு முயற்சி பம்பாய் நகரில் நடைபெறலாம். அதன்மூலமாக பம்பாய் வியாபாரம் செழிக்கும்.

ஒருவிஷயம் மட்டும் சந்தேகத்துக்கு இடம் தருகிறது. இவ்விஷயத்தில் இதாலி பொருளாலும், மனிதராலும் உதவக்கூடுமென்று கருதப்படுகிறது. வெளிநாட்டார் இந்தியரோடு ஒற்றுமையாக வியாபாரம் செய்வதில் ஒருவிதத் தடையுமில்லை. வெளிநாட்டார் இந்தியரோடு உறவுகொள்வதன்மூலம் இந்தியாவைத் தம் அடிமை நாடாக்க நாட்டங்கொள்வரேல் அவர்தம் சிநேகத்தை அறவே நீக்கல் நியாயமாகும்.

—"மாடர்ன் ரெவ்யூ"

### பண்டித ஜவஹர்

பண்டித ஜவஹர்லால்நேரு எழுதிய 'இந்தியாவும் உலகமும்' என்ற புத்தகத்துக்கு இங்கே மதிப்புரை வரையப்படுகிறது. அவரது இவ்வருஷத்திய காங்கரஸ் தலைமைப்பிரசங்கமும், மற்றும் சமீபத்திய சில பேச்சுக்களும், வியாசங்களும் இதிலடங்கி யுள்ளன. திரு. நேரு அபூர்வ குணப்பொருத்தமுடையவர்; அவர்போராடுவார்; சலியாது போரிடுவார்; எதிரிகளைத் தூஷியாது வாதாடுவார்.

ஒரு மனேதத்துவ ஆசிரியர் தமது விரிவுரை மண்டபத்தில் எவ்விதம் பேசுவாரோ அவ்விதமே ஜவஹரும் சிறையில் நீதிபதிகளையும், சிறையதிகாரிகளையும் பக்ஷபாதமின்றிக் கண்டனம் செய்வார். வாதம் புரிவதில் அவர் திறமையாளர். அற்பத்தனமும், பகைமையும் அவரிடம் இல்லை. ஐந்து பக்கங்களில் அவர் மகாத்மாகாந்தியுடன் மாறுபட்ட கொள்கையுடன் எழுதியிருக்கிறார். அரசியல் வாதத்துக்கு எடுத்துக்காட்டு அதுவே. இப்புத்தகத்திலுள்ள முக்கியமான சில வியாசங்களையாகிலும் சமதர்மிகள் படிப்பார்களாக.

—"நியு லீடர்"





## நிலவரிக் குறைவு

அடுத்த ஆண்டு நிலவரி வசூலிப்பது பற்றிச் சென்னை அரசாங்கம் ஓர் அறிக்கையைக் கெஸட்டில் பிரசுரித்திருக்கிறது. அதன் சாரம் வருமாறு:-

நிலத் தீர்வை குறைப்பதுபற்றி நிலங்கள் இருவகையாகப் பிரிக்கப்படும். அவை 1918—19-ம் வருஷத்துக்குமுன் பரிசோதனை (ரிசெட்டில்மெண்ட்) செய்யப்பட்டவை; அதற்குப் பின் பரிசோதிக்கப்பட்டவை. 1918-ம் வருஷத்திற்கு முன் விளைபொருள்களின் விலை குறைந்திருந்தது. அதற்கேற்ப நிலத்தீர்வையும் குறைத்தே விதிக்கப்பட்டது. 1918-ம் வருஷத்திற்குப்பின்னர் யுத்தத்தின் பயனாக விளைபொருள்களின் விலை எதிர்பாராவண்ணம் உயர்ந்தது. அதற்கேற்ப நிலத்தீர்வையும் அதிகமாக்கப்பட்டது. தற்போது விளைபொருள்களின் விலை யுத்தத்திற்கு முன் இருந்ததைவிடக் குறைந்திருக்கிறது. அதனல் 1918-ம் வருஷத்துக்கு முன் பரிசோதனை செய்யப்பட்ட கிராமங்களில் குறைந்த வஜாவும், அதற்குப் பின் பரிசோதிக்கப்பட்ட கிராமங்களில் அதிக வஜாவும் தரப்படும்.

### புஞ்செய் நிலங்கள்

1345-ம் பசலியில் பஞ்சத்தால் பீடிக்கப்பட்ட பல்லாரி, அனந்தபூர் ஜில்லாக்களைத் தவிர மற்ற ஜில்லாக்களில் புஞ்செய் நிலங்களுக்கு நிலவரி குறைத்துவசூல்செய்யப்படமாட்டாது.

### நீர் வரி

நீர் வரியிலும் பொதுவாக ஒன்றும் கழிக்க முடியாதென அரசாங்கம் தீர்மானித்துவிட்டது. முன்னமேயே ஓர் அறிக்கையின் மூலம் தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள புது டெல்டாவில் ஏகருக்கு 15 ரூபாயாக இருந்த நிலத்தீர்வையை 5 ரூபாயாகவும், அதே ஜில்லாவில்பழைய டெல்டாவிலும், திரிச்சி, சேலம் முதலிய ஜில்லாக்களில் காவேரிப்பாய்ச்சல்களுக்கு விதிக்கப்பட்ட ஏகருக்கு 10 ரூபா நிலத்தீர்வையை 5 ரூபாயாகவும் அடுத்த மூன்று பசலிவரையில் குறைத்திருப்பதாக அரசாங்கம் அறிவித்தது. ஆதலால் இப்போது அதுபற்றி ஒன்றும் கூற அரசாங்கம் முன்வரவில்லை.

### அரசாங்கத்தின் முடிவு

(1) பல்லாரி, அனந்தபூர் ஜில்லாக்களில் புஞ்செய் நிலத்தீர்வையில் ரூபாய்க்குஓர் அணு குறைத்துவசூலிக்கப்படும்.

(2) மலையாளம், தென்கன்னடம் ஜில்லாக்களில் தோட்ட நிலத் தீர்வையில் ரூபாய்க்கு இரண்டணு குறைவு செய்யப்பட்டது.

(3) குண்டூர், கர்நூல், நெல்லூர், கடப்பை, செங்கற்பட்டு, திருநெல்வேலி (தங்கச்சேரி கிராமம் தவிர), கோயம்புத்தூர், சித்தூர், வடஆற்காடு (செங்கம், திருவண்ணமலை தாலுக்காக்கள் தவிர), இராமநாதபுரம் முதலிய ஜில்லாக்களிலும், சேலத்தின் வடக்குப் பக்கத்திலுள்ள தாலுக்காக்கள், விசாகப் பட்டினம் ஜில்லாவிலுள்ள சிகாகோல், இச்சபூர் முதலிய தாலுக்காக்களிலும், நீலகிரி ஜில்லாவில் குடலூர் தாலுக்கா தவிர மற்ற இடங்களிலும் ரூபாய்க்கு ஒன்றரையணு குறைத்து நஞ்செய் நிலத்தீர்வை வசூலிக்கப்படும்.

(4) கீழ்க்கண்ட இடங்களில் ரூபாய்க்கு மூன்றணுவுக்கு மேற்படாமல் பரிசோதனைக்காலத்தில் விதிக்கப்பட்ட சதவிகிதப்படி நஞ்செய் நிலத்தீர்வை குறைத்து வசூலிக்கப்படும்.

விசாகப்பட்டினம் (சிகாகோல், இச்சபூர் தாலுக்காக்கள் தவிர,) மதுரை, தென் ஆற்காடு, கிழக்கு - மேற்கு கோதாவரி, கிருஷ்ணு, தஞ்சாவூர், திரிச்சி, சேலம் (தென்புறத்திலுள்ள தாலுக்காக்கள்) பல்லாரி, அனந்தபூர், மலையாளம், தென்கன்னடம், வட ஆற்காடு (செங்கம், திருவண்ணமலை தாலுக்காக்கள்) நீலகிரி (குடலூர் தாலுக்கா), திருநெல்வேலி (தங்கச்சேரி கிராமம்) முதலிய ஜில்லாக்கள்.

# கலம்பகம்

பம்பாயில் அஸ்தமனச் சட்டம் மற்றும் 15 நாட்களுக்கு அமுலிலிருக்குமாம்.

° ° °

இராமநாதபுரம் ஹரிஜன மகாநாடு ஸ்ரீ. முத்துச்சாமி வல்லத்தரசு தலைமையில் கூடியது.

° ° °

திருவனந்தபுரத்தில் சில நாட்களுக்குள் பென்ஸில் தொழிற்சாலையொன்று ஆரம்பிக்கப்படும்.

° ° °

நாயர் மகாநாடு ஒன்று எர்னுகுளத்தில் நடை பெற்றது. நாயர் முன்னேற்றம்பற்றிய விஷயங்கள் பேசப்பட்டன.

° ° °

காஞ்சிபுரத்தில் 150 பீடித் தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்திருக்கிறார். கூலி குறைக்கப்பட்டதே காரணம்.

° ° °

பஞ்சாப் தேசியக்கட்சியார் வரப் போகும் தேர்தல்களில் காங்கரசுடன் ஒத்துழைக்கத் தீர்மானித்து விட்டனர்.

° ° °

முதுகுளத்தூர் தாலுக்கா ஹரிஜன மகாநாடு திரு. முத்துராமலிங்கத் தேவர் தலைமையில் மானமதுரையில் கூடியது.

° ° °

குன்னியூர் வட்டம் அரசியல் மகா நாடு மாங்குடியில் நடைபெற்றது. திரு. வேதரத்தினம் பிள்ளை தலைமை வகித்தார்.

° ° °

காசி ஹிந்து சர்வகலாசாலைக்குப் பொருள் வேண்டுமென்று பண்டித மாளவியா ஒரு வேண்டுகோள் விடுத்திருக்கிறார்.

° ° °

நெல்லூருக்கருகே சுழல் காற்று அடித்தது. ஏராளமான கால்நடைகள் மாண்டன. ரயில்வே கட்டடங்கள் நிலை குலைந்தன.

° ° °

நாடு கடத்தப்பட்டு 20 வருஷங்களாக அமெரிக்காவிலிருந்த ஸ்ரீ. சைலேந்திரநாத்கோஷ் டிசம்பர் 3-ந்தேதி காராச்சிக்கு வருவர்.

° ° °

மைசூர் தர்பாரில் ஹரிஜனங்களுக்கு இடமளிக்கப்பட்டது. மற்றவர்களைப் போல அவர்களுக்கும் சந்தன தாம்பூலம் அளிக்கப்பட்டன.

° ° °

தென்னிந்தியப் புத்தகாலய மகா நாடு இவ்வாரம் புதுக்கோட்டையில் நடை பெற்றது. திரு. வி. இராமதாஸ் பந்துலு தலைமை வகித்தார்.

° ° °

முப்பது வயதுக்கு மேற்பட்ட ஒவ்வொரு பெண்மணியும் கல்வி கற்பிக்கப்படல் வேண்டுமென்று சிங்கியாங்க் அதிகாரிகள் உத்தரவு பிறப்பித்திருக்கிறார்கள்.

° ° °

எல்லைப் புறத்தில் ஒருவர் வீட்டுக் கோழி மற்றொருவர் வீட்டில் நுழைந்தது காரணமாகச் சண்டையேற்பட்டது. நால்வர் கொல்லப்பட்டனர்; மூவருக்குக் காயம்.

° ° °

பம்பாயில் மதப் பூசல் இன்னும் புகைந்துகொண்டே யிருக்கிறது. மறுபடியும் சென்ற செவ்வாய்க் கிழமை சிலர் குத்தப்பட்டனர். கலக ஆரம்பம் முதல் இதுவரை 64 பேர் மாண்டனர்.

° ° °

அகில இந்தியக் காங்கரஸ் தேர்தல் போர்டு நவம்பர் மாதத்துப் பின் பதினைந்து நாட்களில் தேர்தல் நிதி வசூலிப்பதென்று தீர்மானித்திருக்கிறது. முன்னிரண்டு வாரங்களில் தேர்தல் நிதி வசூலிக்கப்பட மாட்டாது.

° ° °

கொழும்பு 'தி இண்டியன் நியூஸ் மார்ட்' சொந்தக் காரரான திரு. பி. எம். ஆர். முத்துசாமி செட்டியார் ஒரு பிலிம் ஸ்தாபனத்தை ஆரம்பித்திருக்கிறார். 'தி இண்டியன் பிலிம் டிஸ்ட்ரிபியூடிங் கம்பெனி' என்பது அதன் பெயர்.

° ° °

தமிழ் நாட்டுச் சுயமரியாதைச் சமதர்ம மகாநாடு நவம்பர் முதல்தேதி திருச்சி முனிசிபல் ஹாலில் நடைபெறும். தோழர் எம். கிருஷ்ணசாமி தலைமை வகிப்பார். பம்பாய் மீரட்சதி வழக்குத் தோழர் டாங்கே மகா நாட்டைத் திறந்துவைப்பார்.

° ° °

பம்பாயில் புது மாதிரியான 'ரயில் வேகோச்' ஒன்று தயாரிக்கப் படுகிறது. அதில் மூன்றும் வகுப்புப் பிரயாணிகளுக்கு அதிக சௌகரியங்கள் இருக்கின்றன. குடும்பத்தவர் முதலிய பன்னிருவர் உட்கார வசதிகள் உள்ள சிறு அறைகள் இருக்கின்றன.

° ° °

திருவனந்தபுரத்தில் ஹிந்துக்கள் கூட்டம் ஒன்று நடந்தது. நவம்பர் 8-ந் தேதி திருவாங்கூர் ஹிந்துக்கள் மகா நாடு நடத்துவதென்றும், ஸ்ரீமான்கள். வி. எஸ். ஸ்ரீநிவாஸ சாஸ்திரி, ஸி. இராஜகோபாலாச்சாரி, டி. ஆர். வேங்கடராம சாஸ்திரி, கே. பாஷ்யம் ஆகியோரில் ஒருவரைத் தலைமை வகிக்க அழைப்பதென்றும் தீர்மானிக்கப்பட்டது.

° ° °

திருநெல்வேலி ஜில்லா கலெக்டர் தலைமையில் அந்த ஜில்லா பொருளாதாரச் சங்கம் கூடிற்று. அந்த ஜில்லாவின் கிராமப்புனருத்தாரணத்துக்கு அரசாங்கம் அளித்துள்ள 48,000 ரூபாயில் 20,000 ரூபாயைக் கிராம ஜலவசதிக்கும், 15,000 ரூபாயைக் போக்குவரவுக்கும், ஐயாயிரம்ரூபாயைக் கக்கூஸ் கட்டவும் செலவழிக்கத் தீர்மானஞ் செய்யப்பட்டது.

## காங்கரஸ்காரர் மீது 144

### பொதுக் கூட்டம் போடாதே!

இம் மாதம் 27-ந் தேதி நடந்த பேரையூர் கிராம அரசியல் மகாநாட்டில் தலைமை வகித்த சங்கரன் கோயில் ஸோமயாஜுலு முதலிய 15 காங்கரஸ்காரர் மீது தடையுத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறது. முதுகுளத்தூர் தாலுக்காவில் பொதுக் கூட்டம் கூட்டுதல் கூடாதென்று அவ்வுத்தரவு கூறுகிறது. அதனல் கமுதியில் நடைபெற விருந்த பொதுக் கூட்டம் நடைபெற வில்லை. இது விஷயத்தைக் காங்கரஸ்காரர் தமிழ் நாட்டுக் காங்கரஸ் தலைவருக்கு அறிவித்துள்ளனர்.

## கொரியர் தியாகம்

'சீன வீக்லி ரிவ்யூ' என்றபத்திரிகையின் நிருபர் எழுதுகிறார்:—

கொரியாவில் ஒருவகைப் புத்துணர்ச்சி தோன்றியுள்ளது. தேசபக்தி மக்களிடையே ததும்புகிறது. தேசியத்தின் பொருளை அவர்கள் உணர்ந்து கொண்டார்கள். அதை அடைய அவர்கள் தியாகம் செய்ய முனைந்துவிட்டார்கள். தங்கள் தீபகற்பத்துக்கு வெளியேயுள்ள நாடுகளின் நிலைமையை அவர்கள் கண்திறந்து கவனித்துக் கொண்டார்கள். சிப்பாய்களின் பட்டாளக் கத்திகளும், துப்பாக்கிச் சப்தங்களும் அவர்களை அடக்கிவிடா. இதுவே நவீன கொரியாவின் உணர்ச்சி. இந்த உணர்ச்சி மூலம், ஜப்பானிய ஏகாதிபத்தியத்தை ஒழிப்பதென்று அவர்கள் வாக்குறுதி செய்துள்ளார்கள். சுதந்திரத்துக்காக உயிர்போகும்வரை போராட அவர்கள் தீர்மானித்து விட்டார்கள்.

## சப்தத்தால் ஆயுள் விருத்தி!

அதிக சப்தமுள்ள பிரதேசங்களில் வசிப்பதால் ஒருவரது ஆயுள் குறுகுமென்பது விஞ்ஞானிகள் துணிபு. ஆனல் இப்பொழுது ஜப்பானிய அறிஞர் இருவர் அதற்கு மாறாகக்கருதுகிறார். அதிக சப்தமுள்ள இடங்களில் வசிப்பதால்நெடுநாள் உயிர்வாழ்தல் கூடுமென்பது அவர்களது அபிப்பிராயம்.

1930-ம் வருஷம் டோக்கியோவில் இரு அறிஞர் இதற்கான பரீட்சையைத்துவக்கினர். இருவரும் எலிகளை வளர்த்தனர். நாளொன்றுக்கு 1283 ரயில் வண்டிகள் ஓடும் ஓர் இடத்துக் கடியில் பெரியதோர் எலிக்குடும்பம் வளர்க்கப்பட்டது. நிசப்தமான ஓர் இடத்தில் மற்றோர் எலிக்குடும்பம் வளர்க்கப்பட்டது. மற்ற விஷயங்களில் இரு குடும்பங்களும் வேற்றுமையின்றி வளர்க்கப்பட்டன. நிசப்தமான இடத்தில் வளர்ந்த எலிகளைவிட அதிக சப்தமுள்ள இடத்தில் வசித்த எலிகளே சராசரி 53 நாட்கள் அதிகமாக உயிர் வாழ்ந்தன.

ஆனல் சப்தமுள்ள இடத்தில் வளர்ந்த எலிகள் மற்ற எலிகளைப் போலச் செழிப்பாக வளரவில்லை.

## வாசனை வீசும் சினிமாக் காட்சி!

சினிமாப்படங்கள் ஆரம்பத்தில் அசையும் படங்களாக விருந்தன; பிறகு பேசும்படங்களாயின. வர்ண பேதக் காட்சிகள் இப்பொழுது பரீட்சார்த்தமாக நடைபெறுகின்றன. இங்கிலாந்தில்வேலையற்ற இருவர் அந்தக் காட்சிகள் நடைபெறும்போது அவற்றிற்கேற்ற வாசனையை யுண்டுபண்ணும் முறையையும் கண்டுபிடித்திருக்கின்றனர். சமையலறைக் காட்சி காட்டப்படும் பொழுது சமையல் வாசனை வீசும். இம்மாதிரி ஒவ்வொருகாட்சிக்கும் ஏற்ற வாசனை உண்டாகுமாம்.

## கைத்தொழில்

அமெரிக்க இளைஞர் கமிஷன், அமெரிக்கக் கல்விச் சபை முதலியவற்றின் சார்பில் சமீபத்தில் நியூயார்க் நகரில் ஒரு மகாநாடு கூட்டப்பட்டது. அமெரிக்காவின் பெரிய பிரச்னைகளில் ஒன்று வேலையில்லாத் திண்டாட்டம் என்றும், லக்ஷக்கணக்கான வாலிபர்கள் வேலையின்றித் தவிக்கும் பரிதாபக் காட்சி மனத்தை உருக்குகிறதென்றும் பலர் பேசினர்.

அம் மகாநாட்டில் பேசிய திரு. ஹோமர் - பி - ரயினில் குறிப்பிட்டதாவது:—"நம் இளைஞரின் முக்கியக் கவலை வேலையில்லாத் திண்டாட்டமாகும். பதினாறு வயது வந்த ஒவ்வொரு வாலிபனுக்கும் நாம் தொழில் தருவதன் மூலம் பல குறைகளைப் போக்குதல் கூடும். சில பிற்போக்கான செய்கைகள் மறைதலுங்கூடும்."

ஐக்கிய மாகாணத்தில் 16 முதல் 24 வயதுக்குட்பட்ட இளைஞர் சுமார் 20,100,000 பேர் இருக்கிறார். இவர்களில் 4,000,000 பேர் பள்ளிக்கூடங்களிலும் கலாசாலைகளிலும் இருக்கிறார். 500,000 பேர் ஓய்வு நேரப் பள்ளிக்கூடம் செல்கிறார். 7,600,000 பேர் வேலையில்லாத் திண்டாட்ட நிவாரண வேலைகளில் நியமனம் பெற்றனர். 2,800,000 பேர் கலியாணமான பெண்கள். மீதி 5,200,000 பேர் வேலையின்றித் தவிக்கிறார்.

இதையே சராசரிக் கணக்கில் பார்த்தால் 16 வயது முதல் 24 வயதுக்குட்பட்டுப் பள்ளிக்கூடத்திலு மின்றி, ஆதாயமுள்ள வேலையிலுமின்றித் தவிக்கும் இளைஞர் நம் நாட்டில் நூற்றுக்கு 40 பேர். இதற்கு என்ன மருந்து? இந்தப் பரிதாப நிலையை எவ்விதம் சமாளிப்பது? 18 வயதுவரை அனைவரும் கட்டாயமாகப் படித்தல்வேண்டுமென்று கட்டாயப் படிப்புக்காலத்தை நீடித்தல், நூல் நிலையப் பிரசாரத்தை விருத்தி செய்தல், போதகாசிரியத் தொழில், ஓய்வுநேர வேலைகள், இவைகளுக்கு நூற்றுக்கணக்கான வாலிபர்களை நியமித்தல் முதலிய சில பரிகாரங்களாகும்.

ஐக்கிய மாகாணத்திலுள்ள ஒவ்வொரு வகுப்பினரிடமும் பணம் தேவையாயிருப்பதால் இத்தகைய வேலைகள் நடைபெற முடிவதில்லை.

---

### தரித்திர தேவதை ஆட்சி!

'நியூ அவுட்லுக்'என்றபத்திரிகையில் திரு. மஜூம்தார் எழுதுவதுவருமாறு:

இந்நாளில் கிராமங்களிலுள்ள சாதாரணமான ஏழைமக்கள் முன்னோர்களைப் போல் கடவுளுக்குப் பயப்படுகிறார்களில்லை. கடன் சுமை தாங்கமாட்டாது அவர்கள் தவிக்கிறார்கள். பொருளாதார நெருக்கடியும், இயற்கையின் மாறுபாடுகளும், கிராமங்களின் பொருளாதார அஸ்திவாரத்தைத் தகர்த்து விட்டன. கடன் வாங்கியவர்களுக்குத் திருப்பிக்கொடுக்க முடியாமல் ஏழைகள் தவிக்கின்றார்கள். கடன் கொடுத்தவன் ஏழைமீது வழக்குத் தொடர்கிறான்; கோர்ட்டுக்குப் போகிறான். ஏழைக் கிராம விவசாயியின் நிலம், மனை, கால்நடையாவும் கடன் பொருளுக்காக ஏலம் விடப்படுகின்றன.

கிராமங்களில் தரித்திர தேவதை ஆட்சி புரிகிறது. அன்பு மறைந்தோடி விட்டது. ஒன்றாயிருந்த குடித்தன முறை பாழ்பட்டது. குடும்பங்கள் சிதறிச் சிறு குடும்பங்களாக விருக்கின்றன. மக்கள் கடவுளை மறந்துவிட்டார்கள். ஒழுக்கமும், கட்டுப்பாடும் ஏட்டளவிலிருக்கின்றன. சாப்பாட்டுக் கவலையே பெரிதாயிருக்கிறது.

---

பெய்ஸ்பூர் காங்கரஸுக்குச் சுபாஷ் போஸைத் தலைவராகத் தேர்ந்தெடுத்தல் வேண்டுமென்று திரு. கோர். எம். எல். ஏ. கூறுகிறார்.

## குளக்கரைப் பேச்சு

### 'அரசமரம்' சொல்வது

(கமலம்)

இன்று காலை குளக்கரையில் இராமஸ்வாமி சாஸ்திரியார் ஸ்நானம் செய்து கொண்டிருந்தார். முதலியார், கணக்கப்பிள்ளை முதலியவர்களும் இருந்தார்கள். அப்பொழுது உபாத்தியாயர் சுப்புராயர் வந்தார்.

"என்ன உபாத்தியாயரே! சென்னைக்குப் போயிருந்தீரே! எப்பொழுது வந்தீர்" என்று கேட்டார் சாஸ்திரியார்.

"இன்று விடியற்காலை வந்தேன்"

"அப்படியா! கார்ப்பரேஷன் தேர்தல் எப்படி நடந்தது" என்று வினவினார் கணக்கப்பிள்ளை.

"அதைப்பற்றி நாம் பத்திரிகைகளில் படித்தோமே! காங்கரஸ்காரருக்கே அதிக ஸ்தானங்கள் கிடைத்தன." என்றார் முதலியார்.

"இருக்கட்டும் முதலியாரே! நாம் எவ்வளவு பத்திரிகையில் படித்திருந்தாலும் நேரில் கண்டவர் சொல்வதிலேயே சுவாரஸ்யம் அதிகம்" என்றார் சாஸ்திரியார்.

#### கற்றூண் முறிந்தது

உபாத்தியாயர் சொல்ல ஆரம்பித்தார்:—

"சென்னைக் கார்ப்பரேஷனுக்கு ஏககாலத்தில் 40 டிவிஷனிலும் தேர்தல் நடந்தது. சென்னை நகரம் ஓர் அங்குலம் கீழே அழுந்தியது. அதனால் 'ஜஸ்டிஸ்' என்ற கட்சி சாய்ந்தது. அதனைத் தாங்கி நின்ற கற்றூண் ஒன்று முறிந்தது..................."

"என்ன சுப்புராயரே ஒவ்வொன்றையும் விளக்கமாகச் சொல்லும்" என்றார் சாஸ்திரியார்.

"ஓகோ! சரி சொல்கிறேன்" என்று மறுபடியும் தொடங்கினார் சுப்புராயர்:

"இந்தக் கார்ப்பரேஷன் தேர்தலில் 27 ஸ்தானங்களுக்குக் காங்கரஸ்காரர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். மூன்று காங்கரஸ் அபேட்சகர் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஜஸ்டிஸ் கட்சியில் நாற்பது டிவிஷனுக்கும் நிறுத்தக்கூட ஆள்கிடைக்கவில்லை.

"ஒரு டிவிஷனில் பிரபல காங்கரஸ் பெண்மணி ஒருவரை ஜஸ்டிஸ் கட்சியின் முதுகெலும்பான ஒருவர் எதிர்த்தார்; ஆனால் பாவம் தோற்றுப் போனார். இனிமேல் அக்கட்சியை ஆதரிப்பார் எவர்?"

#### ஏழைகளதே இராஜ்யம்

"இந்தத் தேர்தலில் ஒரு விசேஷம் என்னவென்றால் காங்கரஸ் சார்பில் நின்ற அபேட்சகரில் பெரும்பாலர் ஏழைகள். இவர்களை எதிர்த்தவர்களோ படே படே பணக்காரர்கள். ஆனாலும் என்ன? பணக்காரர் வீழ்ந்தனர்; ஏழைகள் வெற்றிபெற்றார்கள். இனி ஏழைகளதே ராஜ்யம். பணக்காரர்களுக்கு அது பூஜ்யம் என்பது வெட்ட வெளிச்சமாயிற்று."

"ஆமாம்; ஆமாம். பணக்காரர் எத்தனை நாட்களுக்குப் பணக்காரராயிருக்க முடியும்? அவர்கள் அதிகாரம் எத்தனை நாட்களுக்கு நடைபெறும்? ஏழைகள் ஆயிரம்பேர் சேர்ந்து தலைக்கு ஒரு அணா செலவழித்தால் பெருங்காரியங்களைச் சாதித்து விடலாம். அவர்கள் மன ஒற்றுமையுடன் உழைப்பார்கள். வெற்றி நிச்சயம் கிடைக்கும். ஆனால் பணக்காரர் பணம் கொடுக்கும்வரை ஏழைகள் அவருக்கு உழைப்பார்கள். அப்படி உழைத்தாலும் மனப்பூர்வமாக உழைக்கமாட்டார்கள்" என்றார் முதலியார்.

#### ஒன்றுபட்டால் வாழலாம்

"அது சரி. ஒருடிவிஷனில் தொழிலாளர் எல்லாரும் தலைக்கு ஓரணா இரண்டணா வீதம் வசூல்செய்து தேர்தலை நடத்தினர். ஓர் ஏழை தெரிந்தெடுக்கப் பட்டார். ஒன்றுபட்டால் நாம் வாழலாம்; வேறுபட்டால் வீழலாம். அதற்கு இந்தத்தேர்தலேசாட்சி.

"ஒரு டிவிஷனில் நடந்த அநியாயத்தைச் சொல்லி முடியாது. தேர்தலுக்கு முதல்நாளே எழுதப்படிக்கத்தெரியாத வாக்காளர்களுக்குத் தேர்தல் அபேட்சகர் ஒருவர் மயக்கத்தையளித்து தேர்தலன்று பகிரங்க வாக்குப் பெற்றுக் கொண்டு அனுப்பி விட்டார்."

"என்ன செய்தாலும் சரி. ஜனங்களுக்குத் தேசபக்தி அதிகம். அவர்கள் எதிர்க்கட்சிக்கு ஆதரவளிக்க மாட்டார்கள்" என்றார் முதலியார்.

#### கூலிக்கு மாரடிப்பவன்

"நேற்றுக்காலையில் நான் ரிப்பன் கட்டடத்தின் முன் நின்று கொண்டிருந்தேன்" என்று மேலும் சொன்னார் சுப்புராயர்: "அப்பொழுது ஒருவன் சொன்னான்; 'கூலிக்கு மாரடிப்பவன் உடம்பு வலிக்குமே யென்று மெதுவாக அடித்துக் கொள்வான். உணர்ச்சியுடன் மாரடித்துக் கொள்பவன் படீர் படீரென்று அறைந்துகொள்வான். அதுபோல கூலிகள் காசுக்காக உழைப்பார்கள். அவர்கட்கு உணர்ச்சியில்லை. காங்கரஸுக்கோ சிறுவர் முதல் பெரியோர் வரை உணர்ச்சியுடனும் உத்ஸாகத்துடனும் உழைத்தனர். அவர்கட்கு யாராகிலும் கூலி கொடுத்தனரோ? அதெல்லாம் ஒன்றுமில்லை. சுயநல மில்லாதவரை யாரும் போற்றுவர். சுயநலமிகளை அவர்களது அடிமைகளே பூஜிக்கும். ஆகவே காங்கரஸில் சேர்ந்து தேசவிடுதலைக்குப் போரிடுங்கள்' என்றான்" என்று உபாத்தியாயர் கூறினார்.

"ஆமாம் உபாத்தியாயரே சட்டசபைத்தேர்தல் எப்பொழுது?" என்று கேட்டார் முதலியார்.

"பிப்பரவரி மாதத்தில் நடக்கும். அதற்கும் காங்கரஸே பெருவாரியான அங்கத்தவரை அனுப்பும்" என்றார் உபாத்தியாயர்.

'காங்கரஸ் வாழ்க; ஏழைகள் உயர்க; பணத்திமிர் ஒழிக.' என்ற சப்தத்துடன் எல்லாரும் சென்றனர்.

---

### பசுவுக்குச் செயற்கைக் கர்ப்பம்

ஆர்ஜெண்டினாவில் செயற்கை முறை மூலம் பிராணிகள் கர்ப்பந் தரிக்கின்றன. அமெரிக்க ஐக்கிய மாகாண விவசாய இலாகாவில் இரண்டு காளைகள் இருந்தன. ஆர்ஜெண்டினாவின் பிரதிநிதி அந்தக் காளைகளை வாடகைக்குவிடுமாறு கேட்டார். அந்த இலாகா அதிகாரிகள் அதற்கு மறுத்துவிட்டார்கள். அந்த எருதுகளுக்குப் பிறக்கும் பசுக்கள் சத்துள்ள பால் கறக்குமாம். ஆகவே அவர் அந்த எருதின் 'விந்து'வைப் புட்டிக்குள் அடைத்துத் தம் நாட்டுக்கு எடுத்துச் செல்லத் தீர்மானித்தார். அவ்விதமே அந்த எருதின் விந்துவுடன் சர்க்கரையைக் கலந்து 34 டிகிரியாக அதனைக் குளிரச்செய்து புட்டியிலடைத்தார். அது ஆர்ஜெண்டினாவுக்கு எடுத்துச் செல்லப்பட்டது. அந்த விந்து ஆர்ஜெண்டினாவில் எட்டுப் பசுக்கள் கருப்பைகளில் செலுத்தப்பட்டது. விஞ்ஞானிகள் அதன் பலனை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். இம்முறை வெற்றிகரமாக நடைபெற்றால் உலகத்தில் செழிப்பான பிரதேசங்களிலுள்ள காளைகளின் விந்துவை எடுத்துச் சென்று செழிப்பற்ற பிரதேசங்களிலும் முதல் தரமான கால் நடைகளை உற்பத்தி செய்தல் கூடும்.

## தலைவர்கள்

### ஜவஹர்

காசியில் நடை பெற்ற பாரத மாதா கோயில் திறப்பு விழாவுக்காகப் பண்டித ஜவஹர் காசிக்கு விஜயம் செய்தார்.

நகர காங்கரஸ் கமிட்டித் தலைவர் அவருக்கு ஒரு விருந்தளித்தார்.

"பொருளாதாரநெருக்கடியைஉத்தேசித்து நடைபெறப் போகும் அடுத்த காங்கரஸ் போரில் விவசாயிகளும் தொழிலாளிகளும் கலந்துகொள்வார்களென்று நினைக்கிறேன்" என்று அவர் விவசாயிகள் கூட்டமொன்றில் பேசினார். மற்றும் இரு பெரிய பெண்கள் கூட்டங்களிலும் அவர் பேசினார்.

### மகாத்மா காந்தி

காசியில் பாரத மாதா கோயிலைத் திறந்துவைத்தபின் மகாத்மா காந்தி டில்லிக்கு விஜயம் செய்தார். அங்கே ஹரிஜனக் கிராமத்தை அவர் பார்த்தார். வேலையில்லாதார் பட்டாளத்தைச் சேர்ந்த சிலர் தம் குறைகளை மகாத்மாவிடம் நேரில் சொல்லவிரும்பினர். அவர்கள் தடுக்கப்பட்டார்கள்; அதனால் தரையில் படுத்து மகாத்மா காந்தியின் அறைக்குள் ஒருவரும் புகாதவாறு சத்தியாக்கிரகம் செய்தார்கள். பிறகு அவர்கள் தங்கள் தேவைகளை ஒருகாகிதத்தில் எழுதி ஒரு ரொட்டித் துண்டையும், சிவப்புக்கொடியையும் சேர்த்து அனுப்பினார்கள்.

### பண்டித மாளவியா

பண்டித மாளவியா டோராடூனிலிருந்து சென்ற சனிக்கிழமை லாகூருக்கு விஜயம் செய்தார்; ஆரிய ஸமாஜ ஸ்தாபகரான ஸ்வாமி தயானந்த ஸரஸ்வதியின் ஆங்கிலோ—வேத கலாசாலைப் பொன் விழாவுக்குத் தலைமை வகித்தார்.

---

### குழந்தைகள் பைகளில் கட்டப்படுகின்றன!

யுத்தம் நேர்ந்தால் விஷவாயுப் பிரயோகம் நடைபெறுவது திண்ணம். அதற்காகப் பாதுகாப்புக் கருவிகள் மக்களுக்கு அளிக்கப்படும். ஆனால் அக்கருவிகளை உபயோகிக்கத் தெரியாத குழந்தைகளை என் செய்வது? அதற்காகப் பிரிட்டிஷார் புதிய முறைகளைக் கண்டு பிடித்திருக்கிறார். குழந்தைகளுக்குத் தனி உடைகள் அளிக்கப்படுகின்றன. அந்த உடைகளுக்குள் வெளிக்காற்றுப் புக முடியாது. சிலமணிக்கொருதரம் அதற்குள் காற்று செலுத்தப்படுகிறது. ஒரு கருவியின் மூலம் காற்றிலுள்ள விஷஅணுக்கள் நீக்கப்படுகின்றன. அதிகப் பணம் கொடுத்து இவ்வுடைகளை வாங்கமுடியாத ஏழைக் குழந்தைகளுக்கு ஒரு விதப்பையளிக்கப்படுகிறது. குழந்தைகள் அந்தப் பைகளிலே போட்டுக் கட்டப்படுகின்றன.

---

### குடி மயக்கத்தை அறிய

குடிமயக்கத்தால் சில மோட்டார் ஓட்டிகள் கண்மூடித்தனமாக மோட்டார் ஓட்டுவதுண்டு. அதனால் ஏற்படும் விபத்துக்கள் அநேகம். இவ்விதவிபத்துக்குள்ளாகும் மோட்டார் ஓட்டிகள் குடித்திருக்கிறார்களா என்பதைப் பரிசீலனை செய்ய ஜெர்மன் அரசாங்கம் ஒரு புது முறையைக் கையாள்கிறது. அந்த மோட்டார் ஓட்டி, பக்கத்துப் போலீஸ் ஸ்டேஷனுக்கு எடுத்துச் செல்லப்படுகிறார். அங்குள்ள டாக்டர் அவரது இரத்தத்தை எடுத்து வைத்திய பரிசீலனைக்கு அனுப்புகிறார்.

---

ஸ்ரீமான் வித்தல்பாய் படேலின் சிரார்த்ததினம் பம்பாயில் பொது மக்களால் கொண்டாடப் பட்டது. ஸ்ரீ. யமுனாதாஸ் மேதா தலைமை வகித்தார்.



## மணித்திரள்

இரசாயனப் பொருளால் கம்பளங்கள் நெய்யப்படுகின்றன.

* * *

பிரிட்டனில் 75,000 குருடர் இருக்கிறார். அவர்களில் 25,000 பேர் உபகாரச் சம்பளம் பெறுகிறார்.

* * *

இதாலியில் குறித்த இடங்களிலேயே நடந்து செல்வோர் பாதைகளைக் கடக்க வேண்டும். இதை மீறுவோருக்கு அபராதம் விதிக்கப்படுகிறது.

* * *

மத்திய மாகாணத்திலுள்ள விக்ரமகோலா என்ற இடத்தில் சுமார் 6000 ஆண்டுகளுக்கு முற்பட்ட கல்வெட்டுக்கள் கிடைத்திருக்கின்றன.

* * *

மாஸ்கோ நகரத்தில் புதிதாக ஒரு க்ஷவரக் கடை வைக்கப்பட்டிருக்கிறது. வேண்டுவோர் காசு கொடுத்துத் தாங்களே க்ஷவரம் செய்து கொள்ளலாம்.

* * *

ஆஸ்திரேலியாவிலுள்ள சிட்னி நகரில் ஒரு பூனை தினந்தோறும் கடற்கரையில் காத்திருந்து 'மல்லட்' என்ற ...ல் மீனையே பிடித்துத் தின்கிறதாம்.

* * *

சிந்துமாகாணத்தில் ஒரு ஹரிஜனப் பெண் ஒரே சமயத்தில் ஆறுகுழந்தைகளைப் பெற்றாள். அவைகளில் ஒன்று மாண்டது. ஐந்து உயிரோடிருக்கின்றன.

* * *

ஆஸ்பத்திரிகளில் ஆண்களை விடப் பெண்களே அதிக ஆபரேஷன்களைச் செய்து கொள்கிறார்களென ஒரு ஆரோக்கியக் கணக்கு விகிதம் கூறுகிறது.

* * *

சில புதிய பல்தேய்க்கும்பிரஷ்களில் முகம்பார்க்கும் கண்ணாடிகள் இருக்கின்றன. அவை பற்களின் சுத்தத்தைத் தேய்க்கும்போதே பார்க்க உதவுகின்றனவாம்.

* * *

அமெரிக்காவிலுள்ள நியூயார்க்கிலிருந்து நியூஜெர்ஸி வரை ஏற்பட்ட ஒரு ரிக்ஷா பந்தயத்தில் மாணவிகளை ரிக்ஷாவில் உட்கார வைத்து மாணவர் அந்த ரிக்ஷாக்களை இழுத்தனர்.

* * *

இரு விதமாக உபயோகிக்கும் மோட்டார்கண்ணாடியொன்று பகலில்பின்னால் வரும் வண்டிகளைப் பார்க்கவும், இரவில் எதிரில்வரும் வண்டி விளக்குகளின் பிரகாசத்தைத் தவிர்க்கவும் உபயோகப்படுகிறது.

* * *

ஒரு வாலிபச் செர்பிய மாது தனது 21-வது வயது முடிவதற்குள் 10 குழந்தைகளுக்குத் தாயானாள். இரட்டைக் குழந்தைகள் இரு முறையும், ஒரே சமயத்தில் மூன்று குழந்தைகளாக இரு முறையும் பிறந்தனவாம்.

* * *

அமெரிக்காவிலுள்ள செயிண்ட்லூயி நகரத்தின் பிராணிக்காட்சிச் சாலையில் சிமிட்டியினாலும் இரும்புக்கம்பிகளாலும் பாறைகள் செய்யப்பட்டுக் குகைகள் உண்டாக்கப்படுகின்றன. இக்குகைகளில் துஷ்டமிருகங்கள் வாழ்கின்றன.

* * *

ஹூபி என்ற இடத்தில் இராணுவத்தளகர்த்தர் ஜெனரல் சங்செயான் என்பவர் தம் பட்டாளத்தின் நன்னடக்கைக்காகச் சந்தோஷப்பட்டு அப்பட்டாளத்திலுள்ளவருக்கு இரண்டு லக்ஷம் நீர்மலாம் பழங்களை இனாமாக அளித்தார்.

* * *

பல்கிரேட் நகரத்தில் ஒருவயோதிகருடைய வயது 100. அவருடைய மனைவியின் வயது 101. இவர்களுடைய மணத்திற்குப் பின்னர் 75 ஆண்டுகள் கழிந்தன. இப்போது இவர்கள் தங்களுக்குள் சம்மதித்தே விவாகரத்து செய்து கொண்டார்கள்.

## உலகக் காட்சி

### காற்றால் இயங்கும் 'ஜாக்'

பாதைகளில் தேய்ந்த லாடங்கள் கிடக்கின்றன. அவை தைப்பதால் அநேக மோட்டார் வண்டிகளில் டயர் விபத்துக்கள் ஏற்படுகின்றன. இவ்வித விபத்து பிரயாணிகளை ஏற்றிச் செல்லும் மோட்டார் வண்டிகளில் நேரிட்டால் பிரயாணிகள் நீண்ட நேரம் காத்திருக்க வேண்டியதாகிறது. மோட்டார் சக்கரத்தைக் கழற்ற 'ஜாக்' உபயோகப்படுகிறது. இதை உபயோகிக்க நீண்ட நேரம் கழிகிறது. அதனால் இப்போது புதிதாக ஒரு 'ஜாக்' கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. இதில் அதிகக் கஷ்டமே இல்லை. ஒவ்வோர் வண்டியிலும் ஆபத்துக்குதவ ஒரு சக்கரம் டயரோடு இருப்பது வழக்கம். அதில் காற்றும் அடித்திருக்கும். சுத்தக் காற்றிலிருந்து சிறிது குழாய் மூலம் 'ஜாக்'கில் செலுத்தினால் மோட்டார் சுலபமாகத் தூக்கப்படுகிறது. அந்தச் சக்கரமே பின்னர் மாற்ற உபயோகப்படுகிறது. 35 பவுண்டு அழுத்தும் சக்தியுள்ள காற்றில் 5 பவுண்டே 'ஜாக்'கின் உபயோகத்துக்காக எடுத்துக் கொள்ளப்பட்டதெனவும், மீதி 30 பவுண்டு சக்தியுள்ள காற்றோடு மோட்டார் ஓடக்கூடுமெனவும் திரு. டெட்ராயிட் என்பவர் கூறுகிறார்.

* * *

### ஆகாய விமானச் சைகில்

ஆகாய விமானங்களில் 'பிராப்பலர்' என்ற ஒரு விசிறி இருக்கிறது. இது சுழல்வதாலேயே ஆகாய விமானம் வேகமாக ஓடுகிறது. இம்மாதிரி விசிறிகள் இப்போது சைகில்களுக்கும் வைக்கப்படுகின்றன. இவ்விசிறிகளின் உதவியாலேயே சைகில்கள் வேகமாக ஓடுகின்றனவாம். இந்த விசிறி முன்சக்கரத்துக்கு முன்னால் இணைக்கப்பட்டிருக்கிறது. இவ்விசிறியைப் 'பெட'லோடு ஒரு கம்பி சேர்க்கிறது. சாதாரணமாகச் சைகிலை ஓட்டுவதுபோலப் 'பெடலை'ச் சுழற்றவேண்டும். 'பெடலை'ச் சுழற்றினால் விசிறியும் சுழல்கிறது. அதனால் சைகில் வேகமாக ஓடுகிறது. சாதாரண சைகில்களுக்கு இருப்பதுபோல ஓட்டத்தடைக் கருவிகளும் இருக்கின்றன.

* * *

### நீராவி ஸ்நானம்

மின்சார வசதியுள்ள வீடுகளில் சுலபமாக நீராவி ஸ்நானம் செய்யும் வசதிகளைத் தர இப்போது புதிய கருவிகள் ஏற்பட்டிருக்கின்றன. இக்கருவியை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்குக்கொண்டு செல்லுதலுங் கூடும். ஒரு அலுமினியப் பாத்திரத்துக்குள்ளேயே இக்கருவி இருக்கிறது. அப் பாத்திரத்தில் நீர் கொட்டிய பிறகு மின்சாரத்தை இயக்க வேண்டும். மேலே போர்த்துக் கொள்ளத் துணியாலான போர்வையொன்று அமைக்கப்பட்டிருக்கிறது. வேண்டியபோது மின்சாரத்தை இயக்கவும், நிறுத்தவும் வேண்டிய பொத்தான் போர்வைக்குள்ளேயே இருக்கிறது. மின்சாரத்தால் அதிர்ச்சிகள் உண்டாகா வண்ணம் மின்சாரக் கம்பிகள், பட்டால் மூடப்பட்டிருக்கின்றன.

* * *

### பதில்சொல்லும் மின்சாரப்படம்

மனிதனுடைய மூளைவேலைகளையெல்லாம் மின்சாரக் கருவிகள் செய்யத் தொடங்கிவிட்டன. இக்காலத்தில் வியாபாரப் பிரசாரங்களெல்லாம் மின்சாரக் கருவிகளால் நடக்கின்றன. அமெரிக்காவிலுள்ள கலிபோர்னியாவில் மின்சார நிலப்படமொன்று தயாரிக்கப்பட்டிருக்கிறது. இப்படம் மோட்டார் வண்டி ஓட்டுபவருக்குப் பிரயோசனப்படுகிறதாம். அம்மாகாணத்திலுள்ள ஒருகுறித்த இடத்திற்குரிய பொத்தானைத்தட்டிய உடனே அவ்விடத்தின் தூரம் பச்சை எழுத்துக்களால் காட்டப்படுகிறது. ஒரு சிவப்புக்கோடு அந் நகரத்துக்குப் போகவேண்டிய மார்க்கத்தையும் காட்டுகிறது. இப்படத்தில் 13 மைல் நீளமுள்ள மின்சாரக் கம்பிகள் இருக்கின்றன. 460 சிறிய 'பல்பு'கள் இருக்கின்றன. ஒருவருடைய உதவியையும் எதிர்பாராது போக வேண்டிய மார்க்கத்தைப் பிரயாணிகள் அறிதல் கூடும்.

* * *

### வயது முதிர்ந்தோர்க்குப் புதிய தலைமயிர்

தலைமயிர் கறுப்பாகவும் வளர்ச்சியுடையதாகவும் இருக்க வேண்டுமென்பது எல்லாருடைய அபிப்பிராயம். இது பற்றி நம் நாட்டில் "தலைமயிர் கறுக்கும் தைலம்" என்ற ஒருவிதப் பசையை வாங்கி ஏமாறுவோர் பலர். அமெரிக்காவில் அறிவியல் ஆராய்ச்சியால் இதற்கு ஒரு மருந்து கண்டுபிடிக்க முடியுமாவெனக் கவனிக்கப்படுகிறது. சில ஆராய்ச்சியாளர் காற்றே அற்ற இடத்தில் வழுக்கைத் தலையிலும் தலைமயிர் அரும்புகிறதெனக் காணப்பட்டது. இதுபற்றி ஒரு புதிய கருவியும் கண்டுபிடித்து டாக்டர். ஆண்டர். ஏ. குவெடோ 500 முறைகளில் பரிசோதித்தார். தலையில் தலைப்பாகை போன்ற பாத்திரம் ஒன்று போடப்படுகிறது. தலையிலுள்ள காற்று மின்சாரத்தின் உதவியால் நீக்கப்படுகிறது. இதனால் வயது முதிர்ந்தோருக்கும் புதிய மயிர்கள் முளைக்கின்றனவாம்.

* * *

### சிறிய தந்த யானைகள்

இந்தியரின் கைத்தொழிலை அமெரிக்கா புகழ்கிறது. பம்பாயில் தந்தத்தால் யானைகள் செய்யப்படுகின்றன. கையால் செய்யப்படும் அந்த யானைகள் பூதக் கண்ணாடியால் பார்க்கப்படுகின்றன. அப்போதே அவற்றின் சிறப்பு விளங்குகிறது. பட்டாணியின் தோலுக்குள் இந்த உருவங்கள் அடங்குகின்றனவாம். சில யானைகளின் உருவங்கள் நெருப்புக் குச்சியின் நுனியிலுள்ள கறுமை நிறமான மருந்தின் அளவுக்கே குறைவாக இருக்கின்றன. இவ்வித யானையின் உருவங்கள் உலக முழுவதிலுமுள்ள பணக்காரர்களுக்கு வெகுமதியாகத் தரப்படுகின்றன.

* * *

### நாய்களின் சத்தத்தை அடக்க வழி

நாய்கள் அதிகமாக உள்ள இடங்களில் இராக்காலங்களில் போவது கஷ்டம். அவைகளின் இரைச்சல்களே உள்ளத்தில் அச்சத்தை விளைவிக்கின்றன. இதுபற்றி நகரங்களில் நகரபரிபாலன சபையில் முறையிட்டுக் கொள்வோரும் பலர். இம்மாதிரியான கெடுதல்களைத் தடுக்கவே அமெரிக்காவில் புதுமாதிரியான முறைகளால் நாய்களின் சத்தங்கள் அடக்கப்படுகின்றன. அவைகளில் ஒன்று நாய்களின் சப்தக் குழாயில் ஆபரேஷன் செய்தல். இவ்வித ஆபரேஷன்களில் கைதேர்ந்தவர் அட்லாண்டா நகரத்திலுள்ள கா என்பவர். அவர் நாய்களின் சப்தக்குழாயில் V போன்ற துவாரம் உண்டாகும்படி சதையை அறுத்து விடுகிறார். இதனால் நாய்க்கு ஒருவிதக் கெடுதலும் இல்லை. சப்தம் துவாரத்தின் வழியே காற்றாக வெளியே போய்விடுகிறது. அதனால் சப்தம் குறைந்து விடுகிறதாம்.

* * *

### பிரகாசிக்கும் உஷ்ணமானி

உஷ்ணத்தின் அளவை அளக்க உபயோகப்படுவது உஷ்ணமானி. உஷ்ணமானியினுள் இருக்கும் பாதரசத்தின் அளவே உஷ்ணத்தின் நிலைமையைக் காட்டும். இதை இரவில் பார்ப்பதும்

## உதிர்ந்த மலர்கள்

"நம் நாட்டுக்கும், மக்களுக்கும் ஏதாவது நன்மை ஏற்படுமானால் அதைச் செய்யக்கூடிய ஸ்தாபனம் காங்கரஸ் ஒன்றே. காங்கரஸ் வகுப்புவாதிகள் ஸ்தாபன மன்று; ஏழைமக்கள் சங்கம். அதில் சேருங்கள். சுதந்திரத்துக்காக உழையுங்கள்."

—நாடி முத்துப்பிள்ளை.

* * *

"அநேகமாக நகரசபைகள்யாவும் புகழ்பெற்ற மனிதர்களையே அதிகமாகக் கவனிக்கின்றன. அதுதவறு. தம் குழந்தைகளைக் கவனிக்கும் தந்தையைப்போல ஏழையையும் பணக்காரர்களையும் சமமாகப் பாவித்தலே நகரசபைகளுக்கழகு. என்னை எல்லைப் புறக் காந்தி என்று கூப்பிடுவது எனக்குப் பிடிக்கவில்லை, ஏனெனில் இரு காந்தி இருப்பதால் மாறுபாடுகள் தோன்றும்."

—அப்துல் காபர்கான்

* * *

"விவசாயிகளே! ஒன்றுபடுங்கள்; உங்களுக்குள் சங்கங்களை ஏற்படுத்திக் கொள்ளுங்கள்; நம்மை ஏமாற்றும் நயவஞ்சகர்களை வீழ்த்துங்கள்; விவசாயிகள் ராஜ்யத்தை ஸ்தாபியுங்கள்; காங்கரஸ் அபேட்சகர்களையே ஆதரியுங்கள்."

—ஹரி கிருஷ்ண மகாதேவ்

* * *

"இந்தியக் கிறிஸ்தவர்களாகிய நாம் இந்தியத் தேசியப் போராட்டத்திலிருந்து விலகி யிருப்பதாகப் பொதுமக்களிடையே வதந்திபரவுகிறது. நாம் உண்மையான தேசபக்தர்கள் அல்லவென்று கருதப்படுகிறது. சரியோ தவறோ, பொதுமக்களிடை இந்த எண்ணமிருந்து வருகிறது. நாம் நம் நாட்டுச் சகோதரர்களுடன் தேசிய வாழ்வில் ஈடுபடாமல் ஒரு சமூகம் முழுதும் விலகியிருப்பதே காரணம். மற்றவர்களைப் போலவே நாமும் இந்நாட்டு மக்கள் என்பதைக் காண்பிக்கும் காலம் வந்து விட்டது. ஏழைமக்களின் பொருட்டு நாமும் மற்றவர்களுடன் ஒத்துழைக்க விரும்புவதாகத் தெரிவித்தல் வேண்டும். நாமும் தேச பக்தர்கள் என்பதைக் காட்டிக் கொள்ள வேண்டும்."

—திவான்பகதூர். எஸ். அரங்கநாதன்.

* * *

"ஒவ்வொரு நாட்டிலும், பிரஜா, சுதந்திரத்துக்கும், அரசியல் சுதந்திரத்துக்கும் அடிகோலியவர்கள் வக்கீல்களே. சமதர்ம ஆட்சி நம் நாட்டுக்குப் புதிதல்ல. நம்நாட்டு முன்னோர் சமதர்மிகளே. இந்தியாவின் கிராம அமைப்பே சமதர்ம ஆட்சிக்கு எடுத்துக் காட்டாகும். ஆனால் ருஷ்யாவைப்போல இந்தியாவிலும் சமதர்ம ஆட்சி நிலைக்க வேண்டுமென்றால் அதுநடவாது. ஒவ்வொருநாட்டுக்கும் தனிப்பட்ட சரித்திரங்களும், நாட்டுவளப்பமும், சமூக அமைப்பும் ஏற்பட்டிருக்கின்றன."

—டி. ஆர். வேங்கடராம சாஸ்திரியார்.

* * *

"கிரேட் பிரிட்டன் சம்பந்தப்பட்ட வரையில் அதன் கீர்த்தி இந்தியாவைப் பொறுத்திருக்கிறது. இந்தியாவின் புகழ் அதன் ரூபாயின் மதிப்புக் குறைவைப் பொறுத்திருக்கிறது."

—வி. எஸ். அரங்கஸ்வாமி ('இந்தியன் பைனன்ஸ்' ஆசிரியர்)

---

...ம் ஸ்ட... தொழிலாளி கடினம். இரவிலும் வி...மண்ணை ஒரே யின்றி உஷ்ணத்தின் ...த்தினான். இவ இப்போது புதிய ...போது அனுஷ் செய்யப்படுகின்றன இதனால் தொழி களுக்குள்ளேயே ...திக கூலியைப் பெறு இருக்கின்றன. பயனுக இப்போது விளக்குகளுடை...ழ, பணக்காரர் வித்தி இரவில் உ...த்தொடங்கியிருக்கிறது. தல் முடிய

—"தி. கை. செ. அ. ஆ."

என்கடன் பணிசெய்து கிடப்பதே
எவ்வுயிர்க்கும் அன்பாயிரு
நவசக்தி

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ் சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில் லோம் ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற். கோமாற்கே நாமென்றும் மீளா வாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னேமே.—(அப்பர்.)

சென்னை 1936ஞூ அக்டோபர்மீ 30உ

## தேர்தல் விழா

விழாக்கள் பலதிறம். அவை பண்டை நாளில் ஒருவிதமாக நடந்து வந்தன; இந்நாளில் வேறு விதமாக நடந்து வருகின்றன. முன்னைய நாள் விழாக்கள் அன்பு, அறம், கலைவேட்கை முதலியன கிளர்ந்து எழுதற்கு ஊற்றாயிருந்தன. இந்நாள் விழாக்களைப் பற்றி விரித்துரைக்க வேண்டுவதில்லை. இந்நாள் விழாக்கள், அழுக்காறு, பகைமை, கொலை முதலியவற்றை எழுப்பி வருதல் கண்கூடு.

### தேர்தல்

இக்கால விழாக்களில் தேர்தல் ஒன்று. இவ்விழாவில் மக்களுக்கு ஊக்கம் பிறப்பதுபோல, மற்ற விழாக்களில் அவ்வளவு ஊக்கம் பிறப்பதில்லை. தேர்தல் காலத்தில் நமது நாட்டின் போக்குக்கு முற்றும் மாறுபட்ட எண்ணங்களும், பொய்யுரைகளும், வசைமொழிகளும் உதிக்கின்றன. பொய்யுரைகளும், வசைமொழிகளும், இன்ன பிறவுமின்றித் தேர்தல் விழா நடைபெறுதல் அரிதாகிவிட்டது. அடிதடி, கத்திக்குத்து, கொலை முதலியனவும் நிகழ்ந்து விடுகின்றன. உற்றார் உறவினர்க்குள் பகைமை, அண்ணன் தம்பிக்குள் மாறுபாடு, தந்தை பிள்ளைக்குள் பூசல், தலைவன் தலைவிக்குள் காழ்ப்பு முதலியனவும் நேர்கின்றன. இன்னும் கொடுமைகள் பல குறித்துக் கொண்டே போகலாம். மக்கள் மாக்களாகிறார்கள் என்று சுருங்கச் சொல்லலாம். ஒழுக்கம் என்னுஞ் சொல்கூட உலக வழக்கில் அற்றுப்போகுமோ என்னவோ தெரியவில்லை.

### மேல்நாடு

தற்காலத் தேர்தல் முறை மேல்நாட்டினது என்பது எவரும் அறிந்ததொன்று. மேல் நாட்டினர் அம்முறையில் பல ஆண்டுகளாகப் பண்பட்டிருக்கிறார். இன்னும் நமது நாடு அத்துறையில் பண்படவில்லை என்றே கூறலாம். அறவொழுக்கத்தை வாழ்வின் அடிப்படையாகக் கொண்ட ஒரு நாடு, அவ்வொழுக்கத்தை அறவே கல்லும் ஒரு நாடாக மாறி வருதலைக் காணக்காணக் கண்ணீர் பெருகுகிறது.

### அறிஞர் முயற்சி

தேர்தல் முறையினின்றும் நாடு விடுதலை யடையுமா? அஃது இந்நாளிலில்லை. தேர்தல் முறையை அடிப்படையாகக் கொண்டு நிலவுவது தற்கால அரசியல் துறை. அத்துறையில் ஈடுபடும் நிலைமை வாழ்வில் ஏற்பட்டுளது. நாய்வேடந் தாங்கினால் குரைத்துத் தானாதல் வேண்டும். என் செய்வது! நன்முறையில் ஒழுக்கத்துக்கு ஊறுநேரா வண்ணம் தேர்தலை நடாத்த அறிஞர் ஒல்லும் வகையானும் முயல்வாராக. சன்மார்க்க போதனை பெருகப் பெருக மக்கள் மனநிலை மாறும். தேர்தலை நன்முறையில் நடாத்தலுங் கூடும்.

### சென்னைத் தேர்தல்

சென்னையில் சென்ற திங்கட்கிழமை நகரசபைத் தேர்தல் விழா நடைபெற்றது. அதற்கென ஏறக்குறைய மூன்று மாதம் பலவகை முயற்சிகள் செய்யப்பட்டன. அம் முயற்சிகளெல்லாந் திரண்டு திங்கட்கிழமை தேர்தல் விழாக் காட்சி வழங்கின. அக் காட்சியை ஈண்டு வருணியாது விடுவது நலம். குயப்பேட்டை, புதுப்பேட்டை முதலிய விடங்களில் எழுந்த எரியும் பகையும் இன்னுந் தணியவில்லை.

### காங்கரஸ்

காங்கரஸ் சார்பில் அமைக்கப்பெற்ற அடாக் கமிட்டி சில விடங்களில் நேரிய முறையில் நியமனங்கள் செய்யவில்லை என்று நாம் முன்னே எழுதியது நேயர்கள் நினைவிலிருக்கும். தக்கவிடங்களில் தக்கவரை அடாக் கமிட்டி நியமனஞ் செய்யாதது தவறு. காங்கரஸ் சார்பில் மூப்பத்தேழு வட்டங்களில் அபேட்சகர் நிறுத்தப்பட்டனர். மூன்று இடங்களில் எக்காரணம் பற்றியோ அடாக் கமிட்டி அபேட்சகரை நிறுத்தவில்லை. காங்கரஸ் சார்பில் ஆட்களுக்குப் பஞ்சம் உண்டோ?

காங்கரஸ் சார்பில் நிறுத்தப்பெற்ற மூப்பத்தேழுவரில் இருபத்தேழுவர் வெற்றி பெற்றனர். ஈரிடத்தில் அடாக் கமிட்டியாரால் கைவிடப்பட்ட இருவர் காங்கரஸ் சார்பில் நின்றே வெற்றி பெற்றனர். இவருள்பட இருபத்தொன்பது காங்கரஸ்காரர் வெற்றி பெற்றுள்ளார். பதினொரு வட்டார் பிறர் வசமாயின. அடாக் கமிட்டியின் கவலை ஈனமே இதற்குக் காரணம். காங்கரஸ் பக்தி ததும்பி வழியுஞ் சென்னையில் பதினொரு பீடம் காங்கரஸ் இழக்க நேர்ந்தமை குறித்து எவரே வருந்தார்?

### ஜஸ்டிஸ்

ஜஸ்டிஸ் கட்சிச் சார்பில் நின்றவருள் வெற்றி பெற்ற அசல் ஜஸ்டிஸ் கட்சிக்காரர் எண்மரேயாவர். மற்ற மூவர் தொழிற்கட்சிச் சார்பில் நின்றவர். இவர் ஜஸ்டிஸ் கட்சிக்காரர் என்று சொல்லப்படுகிறார். நாளடைவில் உண்மை வெளிவரும். பதினொருவரும் ஜஸ்டிஸ் கட்சிக்காராயினும் அக்கட்சிக்கு வெற்றிக்குறி இல்லை என்பது வெள்ளிடைமலை.

### பிராமணரல்லாதார்

'ஜஸ்டிஸ் கட்சி' பிராமணரல்லாதார் கட்சி என்று சொல்லப்படுகிறது. சென்னை வாக்காளருள் நூற்றுக்குத் தொண்ணூறு பேர் பிராமணரல்லாதாராவர். பிராமணரல்லாதார் பெரிதும் நிரம்பிய வாக்காளருள் பெரும்பான்மையோர் காங்கரஸ் சார்பில் நிற்கிறார் என்பது முன்னே நடந்த சில தேர்தல்களிலும், சென்ற திங்கட்கிழமை நடந்த நகர சபைத் தேர்தலிலும் உள்ளங்கை நெல்லிக் கனிபோல் விளங்கலாயிற்று. பிராமணரல்லாதாருள் பெரும்பான்மையோர் மனம் காங்கரஸைப்பற்றிக் கிடப்பதை இன்னும் ஜஸ்டிஸ் கட்சிக்காரர் உணராமலிருப்பது வியப்பேயாகும். இனி ஜஸ்டிஸ் கட்சி தன்னைப் பிராமணரல்லாதார் கட்சி என்று சொல்வதற்குப் பொருளுண்டோ?

### சீர்திருத்தக் கட்சி

இனி ஜஸ்டிஸ் கட்சி அரசியல் முறையில் தன்னைப் பிராமணரல்லாதார் கட்சி என்று சொல்லிக் கொள்ளாதிருத்தல் நலம். அஃதொரு தூய தனிச் சமூக சீர்திருத்தக் கட்சியாக மாறுதல் சிறப்பு. அம்மாற்றத்தால் அக்கட்சி ஆக்கமுறும் என்பது நமது உள்ளக்கிடக்கை. பொதுவாக அக்கட்சியாரனைவரும், சிறப்பாக இளைஞரும் நம்மீது சீற்றங்கொள்ளாது, நிலைமையைக் கூர்ந்து கூர்ந்து சிந்தித்து, உண்மையுணர்ந்து, காலத்துக்கேற்ற வழியில் நடக்க முந்துவாராக.

### வீழ்ச்சி

ஜஸ்டிஸ் கட்சியின் வீழ்ச்சிக்குப் பல காரணங்களுண்டு. அவைகளுள் சில வருமாறு:— காங்கரஸுடன் மாறுபட்டுக் காங்கரஸ் தலைவர்களை நிந்திப்பது, காங்கரஸ்மீது பழிசுமத்தக் காத்துக் கொண்டிருப்பது, அதிகார வர்க்கத்தை ஆதரிக்க எப்பொழுதும் விரைந்து நிற்பது, முன்பின் சிந்தியாது தன் கொள்கைக்கு மாறுபட்டவரைத் தாக்கி வைவது, வகுப்பு வாதத்தை வளர்த்து வருவது, சுயமரியாதைக் கட்சியுடன் அகமொன்றாது புறத்தளவில் ஒன்றுவது முதலியன. இவைகள் நாட்டின் முன்னேற்றத்துக்குத் தடைகள் என்பதை விளக்கவும் வேண்டுமோ? ஆதலால் ஜஸ்டிஸ் கட்சி அரசியல் துறையை விடுத்துச் சமூகச் சீர்திருத்தத் துறையில் நின்று சேவை புரியுமாறு வேண்டுதல் செய்கிறோம்.

சமூகச் சீர்திருத்தமும் தேச முன்னேற்றத்துக்கு வேண்டற்பாலதே. அது, சுயராஜ்யப் போரில் தலைப்பட்டுள்ள காங்கரஸுக்கு ஆக்கந் தேடுவதாகும். சுயராஜ்யம் பெறும்வரை அரசியல் போருக்கென்று காங்கரஸ் கட்சி என்ற ஒன்றே இருத்தல் வேண்டும். வேறுகட்சிக ளிருத்தல் கூடாது. சமூகச் சீர்திருத்தக் கட்சிகள் பல இருக்கலாம். 'ஜஸ்டிஸ்' சகோதரர்கள் நமது வேண்டுதலுக்குச் செவிசாய்க்க முன்னுவார்களாக.

### தொழிலாளர்

தற்போது சென்னையில்தொழிலாளர்க்குள் ஒற்றுமை குலைந்திருக்கிறது. அதனால் தொழிலாளர் முன்னேற்றம் தடைபட்டு நிற்கிறது. தொழிலாளருள் 'ஜஸ்டிஸ்'காரர் என்றும், 'காங்கரஸ்' காரர் என்றும் பிரிந்து நிற்றல் தொழிலுலகத்தை அழிப்பதாகும்.

தொழிலாளர்க்கென்றுசென்னை நகர சபையில் இரண்டு பீடங்கள் தனிமையில் வழங்கப்பட்டிருக்கின்றன. காங்கரஸ் இரண்டு தொழிலாளரை அப்பீடங்களுக்கென்று நியமனஞ் செய்தது. அவருள் ஒருவரே வெற்றி பெற்றார். மற்றொருவரை எதிர்த்துத் தோல்வி யுறச் செய்த தொழிற் கட்சியார் என்று சொல்லப்படுவோரும், தாம் ஜஸ்டிஸ் கட்சிக்காரல்ல ரென்றும், தாம் காங்கரஸ் அநுதாபம் உடையவரென்றும் ஓர் அறிக்கை விடுத்துள்ளார். இஃது ஒரு வழியில் ஆறுதலளிக்கிறது. இவ்வாறே பொதுத் தொகுதியில் தொழிலாளர்கட்சிச் சார்பில் நின்று வெற்றிபெற்ற மூவரும் தம்மைக் காங்கரஸ் அநுதாபிகளென்று அறிக்கை செய்வாரென்று எதிர்பார்க்கிறோம்.

தேர்தலில் தொழிலாளர் எக்கட்சிச் சார்பில் நின்று வெற்றி பெற்றிருப்பினும், நகரசபையில் தொழிலாளருலக நலங் கருதி ஒன்றி உழைக்க உறுதிகொள்வாராக. தொழிலாளர் பிரிவால் பெருந் தீங்கு விளையும். அத்தீங்கு விளையாதவாறு தொழிலாளர் தம்மைக் காத்துக்கொள்வாராக.

### வாக்காளர் நிலை

சென்னை வாக்காளர் நிலை சென்ற திங்கட்கிழமை நடைபெற்ற தேர்தலில் நன்கு புலனாயிற்று. இனி வாக்காளரை எவ்வழியினும் ஏமாற்றுதல் இயலாது. பணம், பதவி, பட்டம் முதலியன ஒன்றுஞ் செய்யா. ஏழை மக்கள் சிலர் பணக்காரரையும், பதவி பட்டதாரிகளையும் தோல்வியுறச் செய்தமை சிறப்பாகக் கவனிக்கத் தக்கது. உண்மை ஜனநாயகம் ஓங்கி நிற்கிறது. வாக்காளர் உள்ளத்தில் காங்கரஸ் கோயில்கொண்டிருக்கிறது. அதை நன்முறையில் பயன்படுத்திக் கொள்ளக் காங்கரஸ் நிர்வாகிகளிடத்தில் நேர்மையுஞ் சத்தியமுந் தேவை.

### ஆல்டர்மேன் - மேயர்

நகரில் காங்கரஸ் மணங் கமழ்கிறது. வாக்காளரும் காங்கரஸ் சார்பில் நிற்கிறார். காங்கரஸ் பெயரால் வெற்றி பெற்றுள்ளவரிடம் காங்கரஸ் பக்தி யிருத்தல் வேண்டும். அவர்கட்குச் சோதனை நேர்ந்திருக்கிறது. சகோதரர்கள் பேய்ச் சோதனைக்கு இடந்தாராமல் உறுதியாக நிற்பார்களாக.



இன்று மாலை ஆல்டர்மென் தேர்தல் நடைபெறப் போகிறது. காங்கரஸ் சார்பில்லாதாரும் ஆல்டர்மென் அபேட்சகராக நிற்கிறார். அவர்கட்குக் காங்கரஸ்காரர் எக்காரணம் பற்றியும் ஆதரவு நல்குதல் கூடாது. சென்னை வேறுராதல் கூடாது என்று எச்சரிக்கை செய்கிறோம்.

மேயர் தேர்தல் வருஞ் செவ்வாய்க்கிழமை நடைபெறுமென்று அறிகிறோம். அத்தேர்தலிலும் காங்கரஸ்காரர் ஒழுங்கு முறைபற்றி நடந்து கொள்ளல் வேண்டும். சென்னையில் பலவித வதந்திகள் உலவுகின்றன. அவைகளை ஈண்டு விரிக்க வேண்டுவதில்லை. காங்கரஸ் பெயரால் வெற்றி பெற்றோர் காங்கரஸ் மனமுடையவராக நடந்துகொள்ளல்வேண்டும்.

### சென்னை

சென்னையில் சென்ற திங்கட்கிழமை நடைபெற்ற தேர்தலை 'வெறும் நகர சபைத் தேர்தல்' என்று எண்ணி விடலாகாது. சென்னை ஒரு சக்தி பீடம். அங்கிருந்தே மின்சாரம் மாகாண முழுவதும் செல்கிறது. சென்னையின் வெற்றி மாகாணத்துக்கு ஊக்க மூட்டும். சென்னையின் தோல்வி மாகாணத்தின் ஊக்கத்தைக் குலைக்கும். ஆகவே சென்னையில் காங்கரஸ்காரர் நன்முறையில் நடக்கக் கடமைப்பட்டிருக்கிறார்.

அணித்தே சட்டசபைத் தேர்தல் நிகழப்போகிறது. அதற்கொருவித உணர்ச்சி யூட்டுவது தற்போது சென்னையில் நடைபெற்ற நகர சபைத் தேர்தலென்க. அடாக் கமிட்டி நேரிய முறையில் கடனாற்றி யிருந்தால் சென்னையில் நாற்பது வட்டங்களும் காங்கரஸ் வயப்பட்டிருக்கும். அடாக் கமிட்டி செய்த தவறு தலைப் பொருட் படுத்தாது, சென்னை வாக்காளர் காங்கரஸுக்கே வெற்றி தேடியுள்ளார். இருபத்தொன்பது வட்டங்களிலும் நேர்ந்தவெற்றிக்குக் காரணமாக நின்றது சென்னைக் காங்கரஸ் நிர்வாகிகளின் உழைப்பன்று. மக்கள் உள்ளத்தில் கிளர்ந்து எழுந்து பொங்கும் காங்கரஸ் பக்தி காங்கரஸுக்கு வெற்றி யளித்தது. அப்பக்தி குலையாதவாறு காங்கரஸ் நிர்வாகிகளும், காங்கரஸ் சார்பில் வெற்றி பெற்ற நேயர்களும் நேர்மை கடைப்பிடித் தொழுகுவார்களாக.

ஆல்டர்மென் தேர்தலிலும், மேயர் தேர்தலிலும் காங்கரஸ் சார்பில் தவறு நிகழ்ந்தால், அது, வரப்போகுஞ் சட்டசபைத் தேர்தலுக்கு ஊறு செய்யும் என்பதை யுணர்ந்து நண்பர்கள் பொறுப்புடன் நடப்பார்களாக.

காங்கரஸ் வாழ்க; காங்கரஸ் வெல்க.

# ருஷ்யாவில் புரட்சி

## நேர்முகத் தேர்தல்கள்

## சிறுவர் வாழ்க்கை மாறுதல்கள்

### ஏழை பணக்கார வித்தியாச முளை

(திரு. லான்ஸ்லாட் லாட்டன்)

ருஷ்யாவில் ஆக்கம் பெற்றிருக்கும் பொதுவுடைமைக் கொள்கை நாளுக்கு நாள் வீழக்கூடு மென்று கருதப்படுகிறது. ருஷ்யா முதலாளிகள் நாடாகுமெனவும் சிலர் கருதுகிறார். இம்மாதிரிக்கொள்கை பரவுமாயின் ருஷ்யாவின் அமைதிக்கே கேடு விளையும். ஆதலின் இப் பரபரப்பு எதுபற்றி ஏற்பட்டது என்று ஆராய வேண்டுவது அவசியமாகும். புரட்சிக் காலத்திற்கு முன்னிருந்த சில பழக்க வழக்கங்களை இப்போது புதுப்பிக்க ருஷ்யா விரும்புகிறது. இம்மாற்றமே ஐரோப்பாவில் பெரிய குழப்பத்தை உண்டாக்கி யிருக்கிறது. ஆதலின் இப்பழக்கங்களைப் பற்றி நாம் அறிய வேண்டுவது அவசியமாகும்.

#### ருஷ்யாவில் புரட்சிகள்

சோவியத் ருஷ்யாவில் புரட்சிகள் தோன்றுவது சுலபம். எவ்வளவு சீக்கிரமாகப் புரட்சிகள் தோன்றுகின்றனவோ அவ்வளவு சீக்கிரமாக அவைகளை அடக்கி விடுதலுங்கூடும். சில நாட்களுக்குமுன் ருஷ்யதேசத்தின் முக்கிய பத்திரிகையாகிய "எகனமிக் லைப்" என்னும் பத்திரிகை "டைம்ஸ்" பத்திரிகைக்கு ஒரு குறிப்புத் தந்தது. அதில் ருஷ்யா முதலாளித்துவ நாடாக மாறக் கூடுமென்ற குறிப்புக் காணப்பட்டது.

#### சிறுவர் சீர்திருத்தம்

தற்போதுள்ள ருஷ்யச் சிறுவர் வெளி இடங்களில் போதிக்கப் படுகின்றனர்; உபாத்தியாயர்களுக்கும், பெற்றோர்களுக்கும் மாறாக நடக்க உரிமை பெற்றிருக்கிறார். ஒரு நாட்டின் சிறப்புக்குக் காரணம் சிறுவரின் நல்வாழ்க்கை யன்றோ? இதை அரசாங்கம் உணர்ந்தது; குடும்ப வாழ்க்கையின் சிறப்பை மக்களுக்குப் போதிக்கிறது; சிறுவரை நன்னெறியில் நடக்கத் தூண்டுகிறது. சிறுவர், உபாத்தியாரிடத்தும் பெற்றோரிடத்தும் மரியாதையாயிருக்கப் போதிக்கப்படுகிறார். கட்டாயப் பரிட்சைகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. பதினெட்டு வருஷமாக உள்ள ருஷ்ய அரசாங்கத்தில் ஏற்பட்ட குற்றங்களெல்லாம் பண்டைப் பெரியார்மீது சுமத்தப்படுகின்றன.

#### கல்வியில் கவனிப்பு

தற்போதைய அரசாங்கம் கல்வியிலேயே தன் முழுக் கவனத்தையும் செலுத்துகிறது. கல்வியே மற்ற மாறுதல்களுக்கெல்லாம் அடிப்படையாகும். அக்கல்வி மாற்றத்திலும் நாஸ்திகமே சிறப்பாகக் கவனிக்கப் படுகிறது. அதனால் புதிய சீர்திருத்தங்களுக்கும் தற்போதைய அமைப்புக்கும் மிக வித்தியாசம் சிறிதும் இல்லை.

#### அரசியல் மாறுதல்

கல்வியைப் போன்று அரசியலிலும் அநேக மாறுதல்கள் நிகழ்கின்றன. இதுபற்றிப் பலர் பலவிதமாகக் கூற முற்பட்டனர். ஆங்கில அரசியல் அமைப்பைப்போல ஜனநாயக ஆட்சியும், பார்லிமெண்டும் ஏற்படுத்தக் கூடுமெனச் சிலர் எதிர்பார்த்தனர். அவ்வாறான மாறுதல்கள் எவையும் நடைபெறவில்லை. இப்போதுள்ள அரசாங்கமே சிறிது மாற்றப்படுகிறது. நகர்ப்புறங்களிலும் கிராமங்களிலும் உள்ள வாக்காளர்களுடைய யோக்கிய தாம்சங்களில் இப்போது வித்தியாசம் காட்டப்படுகிறது. அவ்வித வித்தியாசங்கள் இனி நிகழா. எல்லா மக்களும் சமமாகக் கருதப்படுவார்கள்.

தேர்தல்களிலும் சில மாறுதல்கள் ஏற்படுகின்றன. மறைமுகத் தேர்தலே தலைகாட்டாது. இவ்வித மாறுதல்களெல்லாம் ஒருவர் ஆணைப்படி நடக்கும் அரசியல் அமைப்பைச் சிறிதும் மாற்றுவனவல்ல. பொது உடைமைக் கட்சியே நாட்டில் ஆக்கம் பெற்ற கட்சியாக நிலவும்.

#### பொது உடைமை விளக்கம்

பொருளாதாரத் துறையிலும் சில மாறுதல்கள் நிகழ்கின்றன. இம் மாறுதல்கள் தற்போதுள்ள முறையினின்றும் முன்னேற்றமடைந் திருக்கின்றனவா அல்லது பிற்போக்கடைந்திருக்கின்றனவா என்று காண்பதற்கு இவற்றைப் போல்ஷிவிக் கண்கொண்டு பார்த்தல் அவசியமாகும். மார்க்ஸின் தத்துவத்தை லெனின் விரிவுரைப்படி இரு கூறாகப்பிரித்து உணர்தல் வேண்டும். முதலாவதாக நாட்டின் விளை பொருள் அனைத்தையும் அரசாங்கத்தின் வருவாயாக மாற்றல். இக்கொள்கையைத் தெஸ்ஸலோனிய மக்களுக்காக ஏற்பட்ட செயின்ட் பாலின் சுவிசேஷத்திலிருந்து மார்க்ஸ் பெற்றார். அச்சுவிசேஷத்தில் "தொழில் செய்ய விரும்பாதவன் உணவு கொள்ளக் கூடாது" என்று கூறப்பட்டிருக்கிறது. அதனால் தொழில் செய்வோரிடத்தும் தொழில் வெறுப்போரிடத்தும் வித்தியாசம் பாராட்டவேண்டுவது அவசியமென அவர் கூறுகிறார். அப்படியே நாட்டின் விளைபொருளும் அவரவர் தொழில் அளவுக்கேற்பப் பங்கிடப் பெறல் வேண்டும். இதனால் தேக உழைப்பு உடையவருக்கும் மூளைவேலை உடையவருக்கும் எவ்வித வித்தியாசமும் இராது. இதனால் மக்கள் தங்கள் விருப்பத்துக்கேற்பப் பொருள் பெற முடியும். இதன் மூலமாகவே பொது உடைமை தோன்றும்.

#### ருஷ்யாவில் புரட்சி

1917-ம் ஆண்டில் ருஷ்யாவில்பெரிய புரட்சி உண்டாயிற்று. அதன்பயனாகப் பொது உடைமை அரசியல் தோன்றிற்று. சமதர்ம உணர்ச்சியே பொது உடைமையின் ஊன்று கோலாகும். சமதர்ம வாழ்க்கையை அடையாமுன்னமே ருஷ்யா பொது உடைமை அரசியலுக்கு இடமளித்துவிட்டது. இது பொது உடைமை வீழ்ச்சிக்குக் காரணமாயிற்று. இவ்வீழ்ச்சியே ருஷ்யாவில் 1921-ம் வருஷத்திய கலகத்துக்குக் காரணமாயிருந்தது. அப்போதே சமதர்மத்தின் பெருமை உணரப்பட்டது. சமதர்மத்தைத் துணையாகக் கொள்ளாப் பொது உடைமை வாழ்விற்குப் புரட்சி வாழ்வு என்ற விரிவுரை வழங்கப்பட்டது. 1928-ம் ஆண்டில் ஏற்பட்ட 5 வருஷத்திட்ட மொன்று 1930-ம் வருஷத்தில் பெரியதோர் ஏமாற்றத்தை விளைவித்தது. பொருள் விகிதாசாரம் குறைவுபட்டது. விளைபொருளை அதிகமாக்க அரசாங்கத்தின் பணமெல்லாம் தொழிற்சாலைகளின் முதலுக்கென ஒதுக்கப்பட்டன. விளைபொருள்களை உற்பத்தி செய்வதற்குப் பதிலாக இத்தொழிற்சாலைகள் யுத்த ஆயுதங்களைப் பெருக்கின.

#### ஐந்துவருஷத் திட்டம்

இரண்டாவது ஐந்து வருஷத் திட்டமொன்று 1933-ம் வருஷம் துவக்கப்பட்டது. இதற்குக் காரணமாயிருந்தவர் திரு. ஸ்டாலின். அவ்வாண்டு நவம்பர் மாதத்தில் நடைபெற்ற ஒரு கூட்டத்தில் முதலாளித்துவத்தை எவ்வாறு சமதர்மம் தோற்கடிக்கும் என்ற கேள்விக்குப் பின்வருமாறு அவர் பதிலளித்தார்.

"சமதர்மம் சிறந்த தொழிலுக்குக் காரணமாகும். முதலாளித்துவ நாட்டைவிட அதிகப் பயனைத் தொழில் பெறும். விளைபொருள்களுக்கும் அதிக மதிப்பு ஏற்படும். எல்லாரும் எளிய வாழ்வை நடாத்த முற்பட்டால் சமதர்மம் உரம் பெறுமெனச் சிலர் கருதுகிறார். இது உண்மையன்று. அதிக விளைபொருளாலேயே சமதர்மம் ஓங்கி வளரும். இதனால் மக்கள் அதிக விகிதாசாரத்தைப் பெற்றுச் சந்தோஷமான வாழ்வை நடாத்தமுடியும்."

இதுவே மார்க்ஸ், லெனின் முதலியவர்களுடைய கொள்கையுமாகும். சமதர்மமே அதிக விளைபொருளை உண்டாக்கும். இக்கொள்கையை நடைமுறையில் கொண்டுவந்தவர் திரு. ஸ்டாலின். இந்தத் திட்டம் 1937-ம் ஆண்டு முடிவு பெறும். அடுத்த ஒரு வருஷத்தில் வாழ்க்கையின் அளவு அதிகப்படாவிடின் சமதர்ம ஆட்சி வீழ்ந்து பட்டதாகவே கருதப்படும். சமதர்ம வாழ்வின் ஆட்சி குறைந்த காலமே ருஷ்யாவில் இருந்ததென்றும் அதனால் அதிகமாக ஒன்றும் எதிர்பார்க்க முடியாதென்றும் சிலர் கருதலாம். ஏற்பட்ட சில நாட்களுக்குள்ளாகவே சிறிது மாறுதலை உண்டாக்கியிருத்தல் வேண்டும். இச்சிறிய மாறுதலும் இல்லையேல் சமதர்மம் வீணாகும்.

#### உண்மையை மறைத்தல்

ருஷ்யாவில் சமதர்மத்தால் உண்டாகும் கெடுதல்களை ருஷ்ய மக்கள் பகிரங்கமாகக் கூற மறுக்கிறார்கள். உண்மையை மறைத்து வேறு விதமாகக் கூறவும் அவர்கள் முற்படுகிறார்கள். உதாரணமாக 'பிரவ்டா' என்றபத்திரிகை "மக்களுக்கு வேண்டிய அளவு விளைபொருளை ருஷ்ய அரசாங்கம் பகிர்ந்து கொடுக்கிறது. அதனாலேயே பசியால் வாடும் இதர நாடுகளுக்கு ருஷ்யா தன் விளைபொருளை அனுப்பக் கூட வில்லை" என்று பொய் கூறுகிறது. முதல் ஐந்து வருஷத் திட்டங்களுக்கு மாறாக மக்களின் உயர்ந்த வாழ்வைக் கருதி அநேக சீர்திருத்தங்கள் நடைபெறுகின்றன. சமதர்மக் கொள்கைகளுக்கும் மீறிய சில முறைகள் விவசாயிகளின் நன்மைக்காக அனுஷ்டிக்கப் படுகின்றன.

#### பண நிர்வாகம்

பண நிர்வாகத்திலும் சில மாறுதல்கள் உண்டாயின. உழைப்புக்கேற்பப் பொருளும் அரசாங்கத்தால் விகிதப் படுத்திக் கொடுக்கப்படுகிறபடியால் தனியாகப் பணம் சேர்த்தல் முடியாததாகும். இதுவே அரசாங்கத்தைத் துன்பப்படுத்தி வந்தது. சென்ற ஜனவரி மாதம் முதல் தேதியிலிருந்து உழைப்பதற்குத் தகுந்த கூலியைப் பணமாகக் கொடுக்க அரசாங்கம் முன் வந்தது. நாணய மதிப்பும் அதிகமாயிற்று. தங்கத்துக்கும் தேச நாணயத்துக்கும் சம்பந்தம் ஏற்பட்டது. அதனால் மக்களுள் அநேகர் தனித் தனியே பணம் சேர்க்கத் தலைப்பட்டனர். மக்களுள் வித்தியாசமும் தலைகாட்டிற்று. விளைபொருளை அதிகமாக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இப்போது ருஷ்யாவில் 'ஸ்டாகானேவ்' இயக்கம் ஏற்பட்டிருக்கிறது. இந்த இயக்கத்தின் உழைப்பாலேயே வாழ்க்கை சிறப்புப் பெறும் என்று சிலர் கருதுகிறார்.

#### ஸ்டாகானேவ் இயக்கம்

சென்ற அக்டோபர் மாதம் ஸ்டாகானேவ் என்ற சுரங்கத் தொழிலாளி 102 டன் எடையுள்ள மண்ணை ஒரே முயற்சியில் வெளிப்படுத்தினான். இவனது முறையே இப்போது அனுஷ்டிக்கப்படுகிறது. இதனால் தொழிலாளரில் சிலரே அதிக கூலியைப் பெறுகிறார். அதன் பயனாக இப்போது ருஷ்யாவில் ஏழை, பணக்காரர் வித்தியாசம் முளைக்கத்தொடங்கியிருக்கிறது.

—"தி. டை. செ. அ. ஆ."

## நகரசபைத் தேர்தல்

தெரிந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள்

போதுத் தொகுதி

காங்கரஸ்

வட்டம் பெயர்

5. திரு. பி. எம். ஆதிகேசவலு நாய்க்கர்.
7. டாக்டர் யு. கிருஷ்ண ராவ்
8. திரு. எம். எஸ். சுப்பிரமணிய அய்யர்.
9. ,, இராஜமன்னர் செட்டி.
10. ,, கே. ஸ்ரீராமுலு நாயுடு.
11. ,, ஜி. அரங்கய்ய நாயுடு.
12. ,, சுவாமி. வேங்கடாசலம் செட்டியார்.
13. ,, எம். பாலசுப்பிரமணியம்.
14. ,, இராதாகிருஷ்ணப் பிள்ளை.
15. ,, பி. எஸ். பாஷ்யம் செட்டி.
16. ,, டி. வி. எத்திராஜலுசெட்டி.
17. ,, ஜி. செல்வபதி செட்டி.
18. ,, எஸ். பக்கிரிசாமிப் பிள்ளை.
19. ,, டி. கே. கண்ணப்ப முதலியார்
20. ,, எம். தாமோதரம் நாயுடு.
24. ,, பி. கே. விநாயக முதலியார்.
25. ,, டி. ஜி. இலக்ஷ்மணசாமி முதலியார்.
26. ஸ்ரீமதி. ருக்மணி லக்ஷ்மிபதி.
27. திரு. என். இராஜகோபாலன்.
29. ஸ்ரீமதி. அம்மு சுவாமிநாதன்
30. டாக்டர் சையத் நியமதுல்லா.
31. திரு. அப்துல் ஹமீக்கான்.
33. ,, என். எஸ். வரதாச்சாரி.
34. ,, ஏ. ஆர். வி. ஆச்சார்.
35. ,, டி. ஏ. ஸ்ரீநிவாசாச்சாரி.
36. ,, கே. சுப்பிரமணியம்.
37. ,, கே. பாஷ்யம் அய்யங்கார்.
38. ஸ்ரீமதி. ஆர். வி. சாஸ்திரி.
39. திரு. எம். பக்தவத்ஸலம்

ஜஸ்டிஸ்

1. திரு. ஸி. பார்த்தசாரதிநாய்க்கர்.
4. ,, எஸ். பி. ஜயராம் நாடார்.
6. ,, அஜீஸ் முகம்மது கௌஸ்.
21. ,, டி. ஆர். கோதண்டராம முதலியார்.
22. ,, கே. வேங்கடசாமி நாயுடு.
23. ,, என். கோபால மேனன்.
32. ,, டாக்டர். நடேச முதலியார்.
40. ,, ஜி. ஜானகிராம செட்டி.

தொழிலாளர் கட்சி

2. திரு. என். சங்கரன்
3. ,, ஆல்பர்ட் இயேசுதாசன்.
23. ,, சி. பாசுதேவ்.

தொழிலாளர் தொகுதி

காங்கரஸ்

1. திரு. ஆர். ஏ. இராஜகோபால் நாயுடு.
2. ,, எஸ். பார்த்தசாரதி நாயுடு.

ஆதி திராவிடர் தொகுதி

1. திரு. ஜே. சிவஷண்முகம்பிள்ளை
2. பி. எம். வேலாயுத பாணி.
3. எச். எம். ஜகந்நாதம்

மற்ற அங்கத்தினர்

வரிசை எண்.

ஐரோப்பிய வியாபார சங்கம்

1. திரு. சி. மெயின் பிரைஸ்
2. ,, ஜி. இ. வாக்கர்
3. ,, டபிள்யு. டி. வில்லியம்ஸ்

தோல் வியாபாரிகள் சங்கம்

4. திரு. மலாங் ஆமத் பாக்ஷா

சென்னைச் சர்வ கலாசாலை

5. திரு. ராவ்பகதூர், கே. வி. கிருஷ்ணசாமி அய்யர்

ஆங்கிலோ இந்தியர்

6. திரு. ரெவரண்டு. டி. ஆர். பேஸ்லி

நகரத்தார்

7. திரு. கே. வி. ஆல். ர. இராமநாதம் செட்டியார்

தென்னிந்திய வியாபாரச் சங்கம்

8. திரு. ஸிடி. எம். சிதம்பரம் செட்டியார்.

ஆந்திர வியாபாரச் சங்கம்

9. திரு. நாராயணதாஸ் கிர்தாரதாஸ்

ஜவுளிக்கடை வியாபாரிகள் சங்கம்

10. திரு. சி. சுப்பிரமணியம் செட்டி.

வியாபார அசோஸியேஷன்

11. திரு. எச். பி. டுதில்.
12. ,, ஏ. ஏ. ஹெயிலீஸ்
13. ,, இ. எச். ஹீத்.

சென்னைத் துறைமுகம்

14. ,, ஜி. ஜி. ஆர்ம்ஸ்ட்ராங்

ரயில்வே

15. திரு. எஸ். எம். ஆன்வில்.

ஆல்டர்மென் ஐவரைத் தேர்ந்தெடுக்க நகரசபைக் கூட்டம் இன்று (30-10-36) மாலை 5-15 மணிக்குக் கூடும்.

# ஜகத் சோதனை

## பகிரங்கத் திருடுகள்

### காகிதம் தின்னும் பசுக்கள்

—:o:—

### ‘உம்’முக்கும் ‘அல்லது’க்கும் சண்டை

(வனசரன்)

‘இராணிமேரி’ ஆகாயவிமானம்

ஹனு:—‘இராணிமேரி’ என்ற பெரிய கப்பலொன்று கட்டப்பட்டதையும் அக்கப்பலே அட்லாண்டிக் மகா சமுத்திரத்தில் அதிகவேகமாக ஓடிற்றென்பதையும் நீ கேள்விப்பட்டிருக்கிறாயல்லவா? இப்போது ‘இராணி மேரி’ ஆகாயவிமானமொன்று கட்டப்படுகிறது. இது மணிக்கு 200 மைல் வேகத்தில் ஓடும். இதனுடைய எடை 17½ டன்.

வன:—இப்படிப்பட்ட பெரிய கப்பல், ஆகாயவிமானம் முதலியவற்றிற்கெல்லாம் மேரி இராணியின் பெயரை ஏன் அமைத்தல்வேண்டும். தம் ஆருயிர்த்துணைவரான ஐந்தாம் ஜார்ஜ் மன்னரின் பிரிவால் ஏற்பட்டவருத்தம் இவற்றால் ஒழியுமென்றா? அறிவியல் நிபுணர் ஜார்ஜ் மன்னரைப் போன்று ஓர் உருவம்செய்து அதற்கு இயங்குந் தன்மையும், பேசுந்தன்மையும் அமைத்து அவ்வுருவத்தை மேரி இராணியாருக்குத்தந்தாலன்றோ அவர்தம் வருத்தம் சிறிது தணியும்?

காகிதம் தின்னும் பசுக்கள்

ஹனு:—மாக்வி பசுக்கள் காகிதங்களைத் தின்ன ஆரம்பித்துவிட்டன. மாக்வி பர்மாவிலுள்ள நகரம். இந்நகரத்திலுள்ள இந்திய சோஷியல் கிளப்பில் சில பசுக்கள் புகுந்து மேஜைகள் மீதிருந்த சில சமாச்சாரப் பத்திரிகைகளைத் தின்றனவாம். ஒருவர் திடீரென ஓடிவந்து அவற்றை இவ்விருந்தினின்றும் கலைத்துவிட்டாராம்.

வன:—யுத்தகாலங்களில் மக்கள் குதிரை மாமிசங்களையும், மற்றத் தசைகளையும் தின்பதுபற்றி நாம்கேள்விப்பட்டிருக்கிறோமல்லவா? ஏன் அவ்வாறு சாப்பிடுதல்வேண்டும்? இதர உணவுப் பொருள்கள் கிடைக்காததனாலேயே. இந்தியாவில் ஒருவேளை உணவும் இல்லாமல் பசியால்வாடும் மக்கள் எத்தனை பேர்? மக்களுக்கே உணவில்லை யென்றால் மாக்களுக்கு உணவு கிடைப்பது எங்ஙனம்? அதனாலேயே அவை காகிதங்களைத் தின்ன முந்திவிட்டன போலும். இஃது இந்தியாவின் வறுமைப் பிணியையன்றோ காட்டுகிறது!

பகிரங்கத் திருடுகள்

ஹனு:—நாகபுரியில் அநேக பகிரங்கக் களவுகள் நடக்கின்றன. ‘விஸ்கி’ புட்டி, சிகரெட், சோப், பல் ‘பிரஷ்’கள், ‘பேஸ்டு’கள், ஊற்றுப் பேனாக்கள், பென்சில்கள் முதலியவைகளே திருட்டு வஸ்துக்கள். ஐ. ஸி. எஸ். ஆபீஸர் ஒருவருடைய வீட்டில் ஒரு ‘விஸ்கி’ புட்டி களவுபோயிற்று. அந்த விஸ்கியும் அவருடைய வீட்டிலேயே குடிக்கப்பட்டிருந்தது. திருடனும் பெரிய மனிதன் — மரியாதைக்குரியவன்—வேஷத்தோடேயே வந்ததாகத் தெரிகிறது. ஐ. ஸி. எஸ். வீடுகளிலேயே இவ்விதக் களவுகள் அதிகமாக இருக்கின்றன.

வன:—இதுவே வெள்ளை நாகரிகத்தின் திருவிளையாடல்போலும்! வெள்ளை நாகரிகத்தில் மூழ்கிய எத்தனை செல்வக் குடும்பங்கள் அழிந்தன. கைப்பொருள் போன பின் வெள்ளை நாகரிகம் திருடவும் தூண்டுகிறதுபோலும். ஐ. ஸி. எஸ். உத்தியோகஸ்தர்களே வெளி நாடுகளுக்குச் சென்று படித்தமையின் அந்நாகரிகத்தில் மூழ்கியவர்கள். அவர்களுடைய மாளிகைகளிலேயே தங்களுக்குரிய பொருள்கள் கிடைக்குமெனக் கள்வர் நுழைந்திருப்பார். ஐயோ! வெள்ளை நாகரிகமே! இந்தியாவின் வறுமைப் பிணியினிடையே உனக்கு இடமுண்டா?

பள்ளிக்கூடத்தில் மோட்டார்

ஹனு:— ஐரோப்பாவில் பள்ளிக்கூடங்களில் படிக்கும் சிறு பிள்ளைகளுக்கு மோட்டார் ஓட்டும் பழக்கம் பள்ளிக்கூடங்களிலேயே கற்பிக்கப்படுகிறது. ஒரு பெரிய பலகையில் தெருக்கள் கட்டப்பட்டிருக்கின்றன. அவைகளில் சிறு மோட்டார் பொம்மைகள் தள்ளப்படுகின்றன. முன்னே போகும் மோட்டாருக்கு எப் பக்கமாகச் சென்று முன்னால் போவதென்றும், கூட்டுப் பாதைகளை எவ்வாறு கடப்பதென்றும் போதிக்கப்படுகின்றன. இதனால் பிள்ளைகள் தங்கள் வாழ் நாளில் மோட்டார் விபத்துக்கள் ஏற்படாவண்ணம் தடுத்துக்கொள்ள இயலுமெனக் கருதப்படுகிறது.

வன:—நமது நாட்டில் மட்டும் ஏன் மூளைக்கெட்டாச் சிலபாடங்களை மனப்பாடமாக ஒப்புவிக்கச் செய்கிறார்? விவசாயம், கைத்தொழில்முதலியவைகளைப் பள்ளிக்கூடச் சிறுவர்களுக்குக் கற்றுக் கொடுக்கக் கூடாதா? நமது நாடு அடிமை நாடாயிருப்பதற்கு இதுவும் ஒரு சாட்சிபோலும்.

அராபியக் கலகம்

ஹனு:—பாலஸ்தீனத்திலுள்ள ஜெருசல நகரத்தில் அராபியர் பணம் திரட்டி யூதருடைய கடைகளில்மறியல் செய்ய முயல்கிறார். யூதர் ஆதிக்கத்தை அவர் இரகசியமாகப் பகிஷ்கரிக்கிறார். சமாதானக்குறி தோன்றவில்லை. ஈராக், சிரியா, எகிப்து முதலிய இடங்களிலிருந்து அராபியருக்கு உதவிகள் கிடைக்கின்றன. வாடிஷேரர் என்ற இடத்தில் ஒரு சோல்ஜர் கொல்லப்பட்டான்.

வன:—ஏதாவது ஒரு கெட்ட செய்கையைக் குறிப்பிடவேண்டுமானால் அது அவனுடைய இரத்தத்தில் ஊறிவிட்டது என்று கூறுவது உலக இயற்கையன்றோ? அவ்வாறு இரத்தபேதத்தினாலேயே மாறுபட்டவர் அராபியரும் யூதரும் அவர்களுடைய கலகத்துக்குரிய முதற்காரணத்தைக் கண்டறிந்து அதை நீக்காது போனால் அவர்களுள் சமாதானம் ஏற்படுமோ? ஆதலின் அவர்களுடைய வருத்தத்தைப்போக்குவதே பிரிட்டிஷாரின் முதல் வேலையாகும்.

‘உம்’முக்கும் ‘அல்லது’க்கும் சண்டை

ஹனு:—இங்கிலாந்திலுள்ள கென்ட் மாகாணத்தில் ஹைதி என்பது ஒரு நகரம். அந்நகரத்தில் வேகமாக ஓட்டி மோட்டார் விபத்துண்டாக்கிய ஒரு மோட்டார் டிரைவர் போலிஸாரால் கைதுசெய்யப்பட்டார். குற்றச்சீட்டில் “கவனமில்லாமல் உம் பொதுப்பாதை மற்றவர்களுக்கும் உரியது என்பதைக் கவனியாமல்” என்று எழுதுவதற்குப் பதிலாகக் “கவனமில்லாமல் அல்லது பொதுப்பாதை மற்றவர்களுக்கும் உரியது என்பதைக் கவனியாமல்” என்று எழுதப்பட்டமையால் குற்றவாளி விடுவிக்கப்பட்டான்.

வன:—நமது மூளை, நியாயத்தை உணர்வதில் செல்வதில்லை. எங்காவது வழக்கில் குற்றங்களைக் கண்டுபிடித்து விடுதலை பெறுவதற்கே மனம் நாடுகிறது. இதற்குத்துணைபுரிபவர் வழக்கறிஞர். வழக்கறிஞராலேயே நியாயாதிபதி உண்மையை உணரக்கூடவில்லை. அதனால் வழக்கறிஞர் தம் மூளையை வேறு நல் வழியில் செலுத்துவாராக.

## பாரத மாதா கோயில்

காசியில் மகாத்மா காந்தி பாரத மாதாவின் கோயிலைத் திறந்து வைத்தார். பல மதஸ்தர்களும் வந்திருந்தார்கள். பண்டித ஜவஹர்லால் நேரு, கான் அப்துல் காபர்கான், சர்தார் படேல், பாபு ராஜேந்திர பிரசாத் முதலியோர் விஜயம் செய்திருந்தனர்.

“இந்தக் கோயிலில் எக்கடவுளின் விக்கிரஹமும் இல்லை. இந்திய நாட்டின் படம் ஒன்றே யிருக்கிறது. அது சலவைக் கல்லால் ஆக்கப்பட்டது. இக்கோயில் சமத்துவக் கோயிலாக விளங்குமென்று நினைக்கிறேன். எல்லா மதஸ்தர்களும், ஹரிஜனங்களும் இங்குக்கூடி நாட்டில் பத ஒற்றுமை, அன்பு, அமைதி முதலியவற்றை நிலை நாட்டுவார்களென்று நம்புகிறேன்” என்று கூறி மகாத்மாகாந்தி அக்கோயிலைத் திறந்துவைத்தார்.

“நான் கோயிலைத் திறந்துவைக்க அருகனல்லன்; பண்டித மாளவியாவின் ஆசீர்வாதத்தால் திறந்துவைக்கிறேன். மக்கள் பரஸ்பரம் அன்பை வளர்ப்பார்களாக” என்று அவர் மேலும் கூறினார்.

## கூட்டுறவுத் தொழிற்சாலை

அமெரிக்காவில் ஹைட்ஸ் டவுன் என்ற விடத்தில் கூட்டுறவுத் தொழிற்சாலை யொன்று நிர்மாணிக்கப்பட்டு வருகிறது. நியூயார்க் நகரத் தொழிலாளரான பெஞ்சமின் பிரௌன் என்பவர் இவ்விதம் கூட்டுறவு முறையில் தொழிற்சாலை யொன்றை நிர்மாணிக்க விழைந்தார்

அந்தத் தொழிற்சாலை பெண்களுக்கு வேண்டிய உடைகளைத் தயாரித்துக் கொடுக்கும். 200 வீடுகள் இப்பொழுது கட்டப்படுகின்றன. 35 வீடுகளின் கட்டடவேலை பூர்த்தியாகிவிட்டது.

“இதுவே அமெரிக்கமுறை. தொழில் செய்து புகழடைய இந்த முறை சந்தர்ப்பம் அளிக்கிறது. ஜனநாயகம் என்ற விலையுயர்ந்த பொருளை நம் நாட்டில் நிலைநாட்டக் கூடிய புதுவழி இதுவே” என்று பெஞ்சமின் பிரௌன் கூறினார்.

திறப்பு விழாவுக்கு ஏராளமான மக்கள் வந்திருந்தார்கள். அவர்கள் கூட்டுறவுமுறையில் நம்பிக்கையுள்ளவர்கள். பெண்களின் கோட்டுகள், அங்கிகள் முதலியன அடங்கிய காட்சியொன்று நடைபெற்றது. 100 பேர் அழைக்கப்பட்டிருந்தனர். தொழிற் சாலையை 35 தொழிலாளரைக் கொண்டே நடத்துவதென்று தீர்மானிக்கப்பட்டிருந்தது. ஆனால் 92பேர் நியமிக்கப்பட்டனர். ஊக்கமும் திறமையும் கொண்ட தொழிலாளரைக்கொண்டு நடத்தப்படுவதால்இந்தக் கூட்டுறவுத் தொழிற்சாலை வெற்றிகரமாக நடைபெறுமென்று தெரிகிறது.



## யாமீன்கான் பல்லவி

அந்தமானைப் பார்வையிட அரசாங்கத்தவரால்அழைக்கப்பட்ட ஸர்.யாமீன் கானும், ஹன்ஸ்ராஜும் இந்தியா வந்துவிட்டனர். ‘கைதிகளின் சுவர்க்கம்’ என்று ஹென்றி கிரெய்க் கூறியதில் அணுவளவும் பிழையில்லை யென்று யாமீன்கான் பல்லவி பாடிவிட்டார்.

“ஸெல்லுலர் சிறையிலுள்ள அரசியல் கைதிகள் பிரித்து வைக்கப்படாமல் ஒன்றாயிருக்க அனுமதிக்கப்படல் வேண்டுமென்று கேட்கிறார்கள். விளையாட்டுமைதானத்தில் விளையாடவும், சமுத்திரத்தில் குளிக்கவும் அவர்கள் அநுமதி கேட்கிறார்கள். விருந்து வேண்டுமென்று அவர்கள் விரும்புகிறார்கள். யாராவது தர்மம் செய்ய ஏற்றுக் கொண்டால் தாங்கள் அநுமதி யளிப்பதாக அதிகாரிகள் கூறினார்கள்; கடல் ஸ்நானத்தைவிடச் சிறைக்கோட்டத்துள்ளேயே நீந்தத் தாங்கள் அநுமதிக்கச் சித்தமாயிருப்பதாகச் சொன்னார்கள்.” என்று அவர் பத்திரிகைப் பிரதிநிதிக்களித்த பேட்டியில் கூறினர். தாம் பண்டித ஜவஹரையும், பாபு ராஜேந்திரப் பிரசாத்தையும் கலவாமல் ஒன்றும் கூற முடியாதென்று ஹன்ஸ்ராஜ் சொன்னார்.

## நான் சர்வாதிகாரியா யிருந்தால்?

அண்ணாமலைச் சர்வகலாசாலை உப அத்தியட்சகரான ரைட் ஆனரபிள் வி. எஸ். சாஸ்திரியார் விழுப்புரத்தில் ‘நான் சர்வாதிகாரியாயிருந்தால்’ என்ற தலைப்புடன் செய்த பிரசங்கத்தின் சுருக்கம் வருமாறு:—

நான் சர்வாதிகாரியாக விருந்தால் பொது ஜன ஊழியர் நியமனமுறையை மாற்றுவேன். ஏனெனில் தற்கால நியமன முறை ஒழுங்காக வில்லை. அதில் ஊழல்கள் நிரம்பி விட்டன. உத்தியோகஸ்தர்கள் அடிமைகளாகி விட்டார்கள். சுமார் 25 வருஷங்களுக்கு முன்பு ஒழுக்கமும், உயர்ந்த மதிப்பும் உள்ளவர்களே பொது ஜன ஊழியத்துக்கு நியமிக்கப்படுவார்கள். இப்பொழுதோ தங்கள் சட்டைப் பையில் பத்திரங்களும், பட்டங்களும் உள்ளவர்களே அப்பதவியைப் பெறுகிறார்கள்.

பொதுஜன ஊழியர் ஒருவர் தம்மைப் பொது மக்களின் தொண்டராகக் கருதுதல் வேண்டும். ஏதோ ஒரு பிரிவுக்கோ, ஒரு சமூகத்துக்கோ ஊழியர் என்று அவர் தம்மை எண்ணிக்கொண்டால் பொது மக்களால் இகழ்ந்துரைக்கப்படுவார்.

பெண்களுக்குச் சொத்துரிமை வேண்டுவது அவசியம். ஆனால் அதற்கெனச் சட்டம் ஏற்படுத்தல் கூடாது.

ஹரிஜனங்களுக் கென்று மிக அழகான பள்ளிக்கூடங்களை அமைப்பேன். நாளடைவில் ஜாதி ஹிந்துக்களும் அப்பள்ளிக் கூடத்துக்குச் செல்ல விரும்புவார்கள். வற்புறுத்தி ஜாதி ஹிந்துக்கள் மத்தியில் ஹரிஜனங்களை உட்காரச் செய்வதைவிட இம் முறை சிறந்தது. ஹிந்துக்களின் கோயில்களை விட நேர்த்தியான கோயில்களை ஹரிஜனங்களுக் கென்று கட்டிக்கொடுப்பேன். ஹிந்தியே இந்தியாவின் பொது மொழியாயிருத்தல் வேண்டும்.

## தேன் சாப்பிடுங்கள்

“தேன் உடம்புக்கு நல்லதொரு மருந்து; புஷ்டியளிப்பது; வியாதிகளை நீக்குவது; சர்க்கரையை விடச் சீக்கிரம் ஜீரணமாவது; இளைஞர்க்கும் வயோதிகருக்கும் உகந்தது. தேனில் சத்துப் பொருள் இருக்கிறது. அதை நான் உணருகிறேன். தேன் உணவுப் பிரசாரம் இப்பொழுது அவசியமானது” என்று ஸ்ரீலாயிட் ஜார்ஜ் கூறினார். நம் நாட்டில் மலைவாழ் தமிழரின் முக்கிய உணவு தேனுந் தினை மாவும் என்பது இங்குக் குறிப்பிடத் தக்கது.

# இந்து மதத்தின் சமரசம்

## இந்து—முஸ்லிம் கலகங்களேன்?

### உருவ வழிபாட்டின் சிறப்பு

### தீண்டாமை இக்காலத்துக்குப் பொருந்தியதல்ல

—:o:—

லாகூரில் நடைபெற்ற இந்து மகா சபையின் வருஷக் கொண்டாட்டத்தின் போது தலைமை வகித்த டாக்டர் குர்த்கோடியின் தலைமை உரையின் சாரம் வருமாறு:—

உலகமுழுவதும் இந்துமதமே பரவவேண்டுமாயின் இந்து சமூகம் திருத்தி அமைக்கப்படல் வேண்டும். இந்துமதக் கொள்கைகளுக்குத் தற்கால அறிவியல் சாஸ்திரங்களின் உண்மையை மேற்போர்வையாக அளிப்பது சிறப்பு. ஒவ்வோர் இந்துவினுடைய அகத்தையும் புறத்தையும் சுத்தம் செய்யவல்லனவாக அக்கொள்கைகள் இருத்தல் வேண்டும். இம்மாறுதலை உண்டாக்க வல்லது இந்து மகா சபையே.

சமரசமதம் இந்துமதமே

மற்ற மதங்களைப் போலல்லாது இந்து மதம் உலகம் முழுவதும் போற்றக்கூடிய ஒரு சமரச மதமாகும். இந்து மதம் சட்டங்களைக் கடந்ததாகும். பிறரை நேசிக்கப்போதிப்பது இந்துமதமே. உடல்கள் பல வேறுபட்டனவாயினும் ஆத்மா ஒன்றே என்று போதிப்பதும் இம்மதமே. ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் கடவுள் இடம் பெற்றிருக்கிறார் என்பதே இந்துமதத்தின் தத்துவமாகும். இவ்வுண்மையை அநேக நூற்றாண்டுகளுக்கு முன்னரே ஸ்ரீ. சங்கராச்சாரியார் உலகத்துக்கு உணர்த்தினர். இவ்வுண்மையை இன்றே ஐரோப்பா உணரமுற்பட்டிருக்கிறது. ஆன்மா என்றும் அழியாதது என்று போதித்ததும் இந்துமதமே. நம்மதமே கடவுளை உருவமாகவும் கண்டது; அருவமாகவும் கண்டது. இதை உணரா அந்நிய மதத்தினரே கீழ் நிலையிலுள்ள மக்கள்மனத்தை ஒன்று படுத்துவதற் கேற்பட்ட உருவ வழிபாட்டை மறுக்கின்றனர். கடவுள் ஊர், பேர் முதலியவற்றைக் கடந்தவர். இது உருவ வழிபாட்டுக்கு மாறுனது என்று கூறுதல் பொருந்தாது. உருவ வழிபாட்டை மறுக்கும் அவ்வந்நிய மதத்தினரே வேறுசில காரணங்களால் கடவுளை ஓர் உருவங்கொண்டே வழிபட வேண்டும் என்று ஒப்புக்கொள்கிறார். இதுபற்றி அறிவையும் காலத்தையும் வீணாக்குதல் தவறு.

மதச் சண்டைகள்

இந்து மதத்திற்குப் பிறப்பிடம் இந்துஸ்தானம். அங்குஇந்துமதத்தின் பேரால்நடக்கும் சண்டைகள் பல. முகமதியர் வேதமாகிய குரானில் பள்ளிவாசல்களின் முன்பு வாத்தியங்கள் கூடாவென்று கூறியிருப்பது உண்மையே. குரானில் கூறியபடி அனுஷ்டிக்கவேண்டியவர் யாவர்? இதை இந்துக்கள் மீது சுமத்துவது பொருத்தமா? இது பற்றியே பெரிய கலகங்கள் ஏற்படுகின்றன. முகமதியர் இந்து மதத்தின் தத்துவத்தை அறியார். உலகமக்கள் அனைவருடைய இயல்புக்கும், போக்குக்கும் பொருந்தஉரிய கருத்துக்கள் இந்து மதத்தில் இருக்கின்றனவென்பதை எவரே மறுக்க வல்லார்? இந்துக்கள் தங்கள் மதத்தின் உயரிய நோக்கங்களை உணராமையே இக்கலகங்களுக்கு அடிப்படையாகும். இந்து மதத்தை மற்ற மதத்தினர் கேவலமாக நினைப்பது தவறாகும்.

சர்வமத சங்கம்

இந்தியாவுக்கு வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் வழங்கியிருத்தல் தவறு. இந்தியாவின் மதம் இந்துமதம். பல குறைந்த எண்ணிக்கையை யுடைய மதத்தினர் பாதுகாப்பை வேண்டின் சர்வமதசங்கம் என்ற ஒரு சங்கத்தை ஏற்படுத்திக் கொள்ளலாம். உலகத்தில் எவ்வாறு சர்வதேச சங்கம் சிறுநாடுகளின் பாதுகாப்புக்குப் பொறுப்பாக இருக்கிறதோ அவ்வாறே இச் சர்வமத சங்கமும் குறைந்த எண்ணிக்கையானவரின் மதங்களுக்குப் பாதுகாப்பையளிக்கும். இந்தியாவின் நன்மைக்காக இதுபோன்ற சர்வமத சங்கமொன்று ஏற்படவேண்டுவது அவசியமாகும்.

தீண்டாமை

ஒரு காலத்தில் இந்துமதத்தில் தீண்டாமை இடம் பெற்றிருக்கலாம். அது அக்காலத்துக்குப் பொருத்தமாகவும் இருந்திருக்கும். இக்காலத்துக்கு அது உடன்பாடல்ல. இது அநேக இடங்களில் வலியுறுத்திப் பேசப்பட்டிருக்கிறது.

தீண்டாமை சாஸ்திரத்தில் வலியுறுத்தப்பட்டிருக்கிறதெனச் சிலர் கூறுவர். காரணங் காண முடியாவிடத்தே சாஸ்திரத்தின் ஆணையை நாட வேண்டுமென்று ஆதி சங்கராச்சாரியரும் தமது கீதை பாஷ்யத்தில் கூறியிருக்கிறார். ஆதலின் சாஸ்திரத்தின் துணையை நாடுதல் பொருந்துமா? உண்மைக்கு மாறான கொள்கைகளுக்குச் சாஸ்திரத்தைப் பின் பற்றுவது நியாயமன்று. ‘ஹரி ஜனம்’ என்ற பதத்தையே நான் வெறுக்கிறேன். அப்பதமே பரிதாபத்துக்கும் உதவிக்கும் உரியவர் என்பதைக் குறிக்கிறது. அதனால் அவர் எக்காலத்தும் இந்நிலைமையிலேயே இருக்கவேண்டும் என்று ஏற்படுகிறதல்லவா? அவர்கள் உயர்நிலையையடைதல் வேண்டும். ஆதலின் ‘ஹரி ஜனம்’ என்ற பெயரையே நீக்க வேண்டுவது அவசியமாகும்.

மத மாற்றம்

இந்து மதத்திலுள்ள சில தீண்டாதாரே சீக்கிய மதத்தைத் தழுவ வேண்டுமென்று கூறப்படுகிறது. சீக்கிய மதத்தைத் தழுவவேண்டுமென்பாரைத் தடுப்பார் இலர். அங்கு உயர் நிலையை அடைதல் கூடுமாயின் மத மாற்றம் அவசியமேயாகும். இந்து மதத்திலேயே இருந்து உயர்நிலை அடைதல் சிறந்த முறையாகும்.

சீக்கிய மதம் இந்து மதத்தினும் வேறல்ல. புரோகிதத்தை மறுக்கும் இந்து ஸ்தாபனங்களில் ஒன்றே சீக்கிய மதம். இவ் வுண்மையை அறியாததனாலேயே திரு-அம்பேத்காரைப் பற்றிச் சில தப்பபிப்பிராயங்கள் நாட்டில் உலவின. மத மாற்றத்தை இந்து மத சாஸ்திரங்கள் ஆதரிக்க வில்லை யென்று சிலர் கூறுவர். இது பொய். கட்டாயப்படுத்தி இது வரை எந்த அந்நிய மதத்தினரையும் இந்து மதத்தில் சேர்த்ததில்லை. நாகரிகமற்றுக் காடுகளில் வசித்த மக்களைச் சிறுகச் சிறுகப் பண்டை ஆரியர் இந்துமதத்தில் சேர்த்தனர். இது மதமாற்ற மல்லவா? வேறு மதத்தினரை இந்து மதத்தில் சேர்க்க வேண்டு மென்று கூற நான் முன்வரவில்லை. அறியாமையாலோ அல்லது காலத்தின் கொடுமை யாலோ வேறொரு மதத்தைத் தழுவினரை நம்முடைய மதத்துக்குத் திரும்பவும் அழைத்துக் கொள்ள வேண்டுவது நமது கடமை யல்லவா? இதுவே இந்த மகாசபையின் முக்கிய வேலையாகும்.

## இராமநாதபுரம் ஜில்லாபோர்டு தேர்தல்

காரைக்குடி ஜில்லா வாசிகட்கு வேண்டுகோள்

நான்கு மாதங்கட்குப் பிறகு வரவிருந்த இராமநாதபுரம் ஜில்லா போர்டு தேர்தலை எவ்வித முன்னறிவிப்புமின்றிச் சமீபத்தில்நடத்துவதென அரசாங்கம் தீர்மானித்திருப்பதாகத் தெரிகிறது.

எவ்வளவு குறுகிய காலமாய் இருந்த போதினும் இந்தத் தேர்தலில் காங்கரஸ் அபேக்ஷகர்களை நிறுத்தி வெற்றி பெறுவதெனத் தீர்மானிக்கப் பெற்று அதற்கு வேண்டியவற்றைச் செய்வதற்காகக் காரைக்குடி ஜில்லா காங்கரஸ் கமிட்டியாரால் அடியிற் கண்டவர்களைக் கொண்ட தேர்தல் கமிட்டி ஒன்று நிறுவப் பெற்றிருக்கின்றது.

இராமநாதபுரம் ஜில்லாபோர்டு தேர்தலுக்கு

7-11-36-ல் நியமனச் சீட்டுகள் தாக்கல் செய்வதற்கும்,

9-11-36 பரிசிலனை செய்வதற்கும்,

23-11-36 தேர்தல் நடத்துவதற்கும் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

இடையில் உள்ள கால அளவு மிகச் சுருக்கமாய் இருப்பதால் அதற்குள் நாம் தீவிரப் பிரசாரம் செய்தும் ஆங்காங்கு காங்கரஸ் தொண்டர்களைக் கலந்தாலோசித்து அபேட்சகர்களைப் பொறுக்கியும் மிக விரைவாக வேலை செய்ய வேண்டியதாயிருக்கிறது.

இவ்வேலைகளைச் செய்வதற்கும் தேர்தல் சம்பந்தமான செலவுகட்குப் பணம் சேகரிப்பதற்கும் ஜில்லா போர்டு காங்கரஸ் தேர்தல்கமிட்டியின் நிர்வாக அங்கத்தினர்கள் ஏ. எஸ். ஸ்ரீநிவாஸன் (கன்வினர்), சா. கணேசன், லெ. நடேசன் ஆகிய மூவர்களும் நமது ஜில்லாவில் சுற்றுப்பிரயாணம் செய்கின்றார்கள். ஆங்காங்குள்ள அன்பர்கள் யாவரும் தமது ஒத்துழைப்பையும் பேருதவியையும் அளிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறோம்.

அன்றியும் இத்தேர்தலில் அபேக்ஷகர்களாக நிற்கவிரும்புகின்றவர்களும் இதுசம்பந்தமாய் எவ்விதமான ஆலோசனைகள் கூற விரும்புகின்றவர்களும் கமிட்டி கன்வினர் திரு. ஏ. எஸ். ஸ்ரீநிவாஸன் அவர்கட்குத் தெரிவிக்க வேண்டுகின்றோம்.

என்றும் நாட்டிற்கு நன்மை செய்வது காங்கரஸ். இவ்வளவு காலமாய் வெளியிலிருந்து போராடிய காங்கரஸ் இன்று எல்லாப் பொதுஸ்தாபனங்களையும் கைப்பற்றி அவைகளின் மூலம் தேசமக்களின் பணத்தையும் சுகத்தையும் பாதுகாக்க முன் வந்திருக்கின்றது.

அதற்கே நமது ஆதரவைக் கொடுத்து நமது ஜில்லாவின் புகழையும் பொருளையும் காப்பாற்ற வேண்டும் எனக் கேட்டுக் கொள்ளுகின்றோம்.

இது சம்பந்தமாக ஆலோசிப்பதற்கு தாது௵ ஐப்பசிமீ 16-ந் தேதி (1—11—36) ஞாயிற்றுக்கிழமை மாலை 3-மணிக்குக்காரைக்குடி காங்கரஸ்மாளிகையில் காரைக்குடி ஜில்லா காங்கரஸ் அங்கத்தினர் கூட்டம் நடைபெறும். அக்கூட்டத்திற்குக் காரைக்குடி ஜில்லாவிலுள்ள காங்கரஸ் அங்கத்தினர்கள் அனைவரும் வர வேண்டுகிறோம்.

ஏ. எஸ். ஸ்ரீநிவாஸன் (கன்வினர்)
மு. காசிநாதன்.
சா. கணேசன்.
லெ. நடேசன்.
கா. கண. க. வேலாயுதம் செட்டியார்
என். இராமசாமி ஐயர்.
ஆர். சாமிநாதய்யர்.
கே. கே. என். இலட்சுமணன்.

“சுதர்மத்தில் எனக்குள்ள நம்பிக்கை அளவற்றது. சநாதனிகள் காங்கரஸில் கலந்துகொண்டு இந்நாட்டின் சுயராஜ்யத்துக்குப் பாடுபடல்வேண்டும்.”

—சூரிய நாராயண ராவ்.

## பைஸ்பூர் காங்கரஸ்

முதல் முதல் காங்கரஸ் மகாசபை தோன்றியவிடம் பம்பாய். இவ்வூருக்கு முந்நூறு மைல் தூரத்திலுள்ள பைஸ்பூரில் இப்பொழுது காங்கரஸ் கூடப் போகிறது. டிஸம்பர் மாதம் இருபதாந்தேதி பம்பாயிலிருந்து பைஸ்பூருக்கு மைலுக்கு ஒரு தொண்டர் வீதம் 300 பேர் நின்றுகொள்வர். பம்பாயிலிருந்து ஒரு தீப்பந்தத்தை எடுத்துக்கொண்டு மைலுக்கு ஒரு தொண்டர் வீதம் ஓடுவர்.

காங்கரஸ் கொடி வணக்க நேரத்தில் அப்பந்தம் காங்கரஸ் நகரத்தையடையும். இம்முறை ஒலிம்பிக் விளையாட்டை அனுசரித்தது. இது பற்றிய ஏற்பாடுகளைச் செய்ய அந்தந்த ஜில்லா காங்கரஸ் கமிட்டியார் கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கிறார்.

## 1940 வரை யுத்தம் நிகழாது

அமெரிக்காவில் சென்றமாதம் சிகாகோ நகரில் மூவாயிரம் வான சாஸ்திரிகள் கூடினார்கள். அவர்கள் ரூஸ்வெல்ட்டே திரும்பவும் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் படுவாரென்று கூறினார்கள். 'கிரகங்கள் யாவும் ரூஸ்வெல்ட்டுக்கே சாதகமா யிருக்கின்றன; லாண்டனுக்கு விரோதமா யிருக்கின்றன' என்று அவர்கள் குறிப்பிட்டார்கள். '1940-ம் வருஷம்வரை உலக யுத்தம் ஒன்றும் தலைகாட்டாது; ஜப்பான் சீனாவை விழுங்காது' என்று அவர்கள் சொன்னார்கள்.

## கணக்குப்போடும் இயந்திரம்!

### எழுதி ஒட்டும் இயந்திரம்!

பர்மிங்காமில் வர்த்தகப் பொருட் காட்சியொன்று நடைபெற்றது. அங்கே ஓர் இயந்திரம் வைக்கப்பட்டிருந்தது. 'பிரன்ஸிஜா கணக்குப்போடும் யந்திரம்' என்பது அதன் பெயர். அதைப் பன்னிரண்டு அங்குலமுள்ள பெட்டிக்குள் வைத்து மூடிவிடலாம். அந்த இயந்திரம் கணக்குப் போடுவதைக் கண்டு பலர் ஆச்சரியப்பட்டனர். ஒரு கணக்கைச்சொல்லி அதன் விடையைக் கேட்டால் உடனே அந்த இயந்திரம் அதன் விடையை ஒரு காகிதத்தில் அழகாக 'டைப்' அடித்து வெளியே நீட்டும். ஒரு குமஸ்தா 15 நிமிஷங்களில் போடும் கணக்கை அந்த யந்திரம் 35 விநாடியில் போட்டுவிடும்.

மணிக்கு 500 கவர்களுக்கு விலாசம் எழுதி, ஒட்டி, நிமிஷத்துக்கு 100 வீதம் முத்திரையிடும் இயந்திரங்களும் அங்கே காணப்பட்டன.

---

திருவாங்கூர் கூட்டுக் காங்கரஸ் கமிட்டியார் திவானிடம் ஒரு தூதுக் கோஷ்டியை அனுப்பியுள்ளனர். காங்கரஸ் கமிட்டியின் கஷ்டங்களை அக் கோஷ்டி அறிக்கை யிட்டது. திவான் அதை அமைதியுடன் கேட்டார்.



## ஸ்பெயின் கலகம்

ஸ்பெயின் தலைநகரான மாட்ரிடுக்கு 17 மைல் தூரத்தில் கலகக்காரர் நெருங்கிவிட்டனர் என்று சென்றவாரமே கூறப்பட்டது. நால்கார்னிரோ நகரம் கலகக்காரர் வசமாயிற்று. கலகக்காரர் தலைநகரைத் தென்மேற்குப் புறத்திலிருந்து எதிர்ப்பாரெனத் தெரிகிறது. தலைநகரம் விழ்ந்தவுடனே அரசாங்கம் காடலோனியா மாகாணத்திலுள்ள பார்ஸிலோனாவைத் தலைநகராகக்கொண்டு எதிர்க்குமென்று ஜெனரல் பிராங்கோ எண்ணுகிறார்.

வெடிகளின் சப்தத்தைக் கேட்டதும் தலைநகரிலுள்ள பெண்கள் தெருக்களில் அணிவகுத்து நின்று ஆண் வீரருக்கு உதவிபுரிகிறார்கள். அரசாங்க வீரரின் ஒற்றுமைக்கும், விடாமுயற்சிக்கும் பெண்களே காரணர்.

### தலைநகருக்குப் பன்னிரண்டு மைலில்

தலைநகருக்குப் பன்னிரண்டு மைல் தூரத்திலுள்ள மொஸ்டோலிஸ் என்ற இடத்திலிருந்த அரசாங்க வீரரைக் கலகக்காரர் தோற்கடித்து விட்டதாக ஒரு செய்தி கூறுகிறது. இதற்குமாறாக அரசாங்கத்தரப்பினர் ஆரகான் என்ற விடத்தில் வெற்றிபெற்று விட்டதாகக் கூறுகிறார். ஸ்பெயின் யுத்தத்தில் தலையிடுதல் கூடாதென்ற கூடியகூட்டம் சரிவர நடைபெறாததாலும், ருஷ்யா ஸ்பெயினுக்கு ஆயுதங்களை அனுப்புதல் கூடுமென்ற சந்தோஷத்தாலும் அரசாங்கத்தைச் சேர்ந்த இராணுவப் படையினர் மகிழ்ச்சி யடைகின்றனர். ஆரன்ஜுவுக்கும் மாட்ரிடுக்கும் இடையில் இருந்த இரயில்வேபாதை கலகக்காரரால் உடைத் தெறியப்பட்டது. அதனால் ஸ்பெயின் தலைநகர் மத்தியதரைக் கடலினின்றும் பிரிக்கப்பட்டு விட்டது.

### அரசாங்கத்துக்கு வெற்றிகள்

ஆரகான், அல்கோரா முதலிய இடங்களில் கலகக்காரர் படைகளைத் தோற்கடித்ததாக அரசாங்கச் செய்திகள் கூறுகின்றன. பார்ஸிலோனாவிலிருந்து சென்ற சில அரசாங்கப்படைகள் பியூக்ளட்ரான் என்ற இடத்தைக் கைப்பற்றியதாகவும் அதனால் சாரகோஸா நகரம் அரசாங்கத்தின் வசமாய் விட்டதாகவும் தெரிகிறது. சில பிரிட்டிஷாரையும், அமெரிக்கரையும் கலகக்காரர் தலைநகருக்கருகில் சிறைப்படுத்தினர். அவர்கள் தலைநகரில் நுழைய அனுமதிக்கப்படுகிறார்கள் இல்லை. நாவல்கார்னிரோ என்ற இடத்தில் கலகக்காரர் வெற்றிபெற்றனர்; தலைநகரை நெருங்கி விஷவெடிகளை வீசுகின்றார். ருஷ்யாவிலிருந்து ஸ்பெயினுக்கு உதவிகிடைக்கிறது. சுமார் 4,75,00,000 ரூபிள்கள் ஸ்பெயின் உதவிக்காக ருஷ்யாவில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. போர்ச்சுகல், இதாலி, ஜெர்மெனி முதலிய நாடுகள் ருஷ்யாவை எதிர்க்கின்றன.

### உதவிமறுக்கும் கூட்டம்

லண்டனில் கூடிய இக்கூட்டம் ஜெர்மெனியின் பதிலை எதிர்பார்த்தது. ஜெர்மெனி தன் குற்றங்களை ஒத்துக்கொள்ளாததோடு ருஷ்யாமீது குற்றஞ் சாட்டுகிறது. செப்டம்பர் மாதம் 12-ம் தேதி பார்ஸிலோனாவிலிருந்து ருஷ்ய யுத்த ஆயுதங்கள் மாட்ரிடுக்குச் சென்றதாகவும், யுத்த ஆயுதங்களைக்கொண்ட ருஷ்யக் கப்பலொன்று கார்தஜீனா துறைமுகத்துக்கு வந்ததாகவும் ஜெர்மெனி கூறுகிறது. இப்பேச்சுக்கள் நடந்து கொண்டிருக்கும் பொழுது போர்ச்சுகல் இக் கூட்டத்தினின்றும் விலகமுயல்கிறது. போர்ச்சுகல், இதாலி, ஜெர்மனி இம்மூன்று நாடுகளும் ஒன்று சேர்ந்து பர்காஸ் நகரத்தில் ஸ்பானியக் கலகக்காரர் அரசாங்கத்தை நிலைநாட்ட முயல்கின்றன. ஜெர்மெனியும், இதாலியும் நெருங்கி ஸ்பெயினிடம் உறவாடுகின்றன. சென்றவாரம் இதாலியின் அந்நியநாட்டுமந்திரியான சியானோ பிரபு பர்லின் நகருக்குச் சென்று ஹிட்லரோடு பேசினார். இப்பேச்சிலிருந்து அபிசினியாவில் இதாலி ராஜ்யமே நிலைபெற்று விட்டதென்பதை ஜெர்மெனி அங்கீகரிப்பதாகத் தெரிகிறது.

### மற்ற நாடுகள்

பெல்ஜியத்திலும் பாஸிஸ்ட் கலகங்கள் ஏற்படுகின்றன. அதனாலேயே பிரசல்ஸில் எம். லூயிடிகிரெல்லி என்ற பாஸிஸ்ட் தலைவர் கைது செய்யப்பட்டார். இவரைச் சிறை செய்ததால் கலகங்கள் வலுக்கின்றன. அதனால் உலக யுத்தம் வெகு சீக்கிரத்தில் ஏற்படக் கூடுமென எதிர்பார்க்கப்படுகிறது.

## பெண்கள் பாதுகாப்பு

ஜெர்மானியத் தொழிற்சாலைகளில் எத்தனை பெண்கள் வேலை செய்கிறார்களென்பதுபற்றிச் சில நாட்களுக்கு முன்னர் ஒரு கணக்கு விகிதம் தயாரிக்கப்பட்டது. அதன்படி ஜெர்மெனியில் வேலை செய்யும் ஆண் பெண் எண்ணிக்கை சுமார் ஒரு கோடியே அறுபத்தொரு லட்சமாகும். இதில் தொழிற்சாலைகளில் மட்டும் வேலை செய்வோர் 28 லட்சம் பேர் ஆவர். இவர்களில் பதின்மூன்று லட்சம் பேர் பெண் தொழிலாளர். இதனாலேயே ஜெர்மானிய அரசாங்கம் பெண்கள் மீது அதிகக் கவனம் செலுத்த ஆரம்பித்தது. பெண்களுக்குத் தொழில் சுதந்திரம் வழங்கப் பட்டது. அவர்களுடைய வேலைத் திறமையும் நன்கு மதிக்கப்பட்டது.

### ஏற்ற தொழில்கள்

பெண் தன்மைக்கும், சக்திக்கும் ஏற்றவாறு பெண்களுக்கு ஜெர்மெனியில் தொழில்கள் வழங்கப்படுகின்றன. தொழிலைவிடப் பெண்கள் முக்கியமாகக் கவனிக்கவேண்டுவது குடும்பமாகும். குடும்ப வாழ்க்கையை அழகுபெற நடாத்துவதே பெண்களின் பெருமைக்கு மதிப்புத் தருவதாகும். மனைவியாகவும், தாயாராகவும் இருந்து பெண்கள் ஆற்றவேண்டிய கடமைகள் பல. இவற்றின் சிறப்பை யுணர்ந்த ஜெர்மானியத் தொழில் மந்திரி தேசியத் தொழில் ஸ்தாபனத்தோடு கலந்தாலோசித்தார். இதன் பயனாகப் பெண் தன்மைக்கு மாறுபட்ட தொழில்களைச் செய்வதினின்றும் பெண்கள் நீக்கப்பட்டார்கள். வேலை செய்யும் பெண்களுக்கும் அநேக பாதுகாப்புக்கள் தரப்பட்டன.

### விளையாட்டுகளும் விடுமுறையும்

ஜெர்மெனிப் பெண்கள் இயக்கம் விளையாட்டுக்களால் உண்டாகும் சிறப்பை உணர்ந்தது; தொழிற்சாலைகளில் வேலை செய்யும் பெண்களுக்குப் போதிய விளையாட்டுக்களையும் கற்றுக்கொடுக்கிறது. ஜெர்மெனியில் தொழிற் பயிற்சி பெற்று ஐம்பத்தைந்து லட்சம் பெண்களிருக்கிறார்கள். கடினமான தொழில்களே பெண்களுக்கு வழங்கப்படுவதில்லை. சென்ற மார்ச் மாதத்திய கணக்கு விகிதப்படி நூற்றுக்கு நாற்பத்துநான்கு பெண்மணிகள் விளையாடுகிறார்கள். இவர்களில் நூற்றுக்குப் பதினைந்து பேர் தொழிற்சாலைகளில் வேலை செய்வோர். 1935-ம் வருஷத்தில் மட்டும் இருபத்து மூன்று லட்சம் பெண்கள் விளையாட்டுக்களில் தேர்ந்தவர்களானார்கள்.

பெண் தொழிலாளர்களுக்கு விடுமுறை நாட்களும் வழங்கப்படுகின்றன. அந்நாட்களில் சிறு பெண்கள் எவ்விதக் கூலியையும் எதிர்பாராது தொழிற்சாலைகளில் வேலைசெய்கிறார்கள்.

### பெண்களும் கடின வேலையும்

கல் அறுக்கும் தொழிற்சாலைகளில் பெண்களை அதிகமாக அமர்த்தல்கூடாதென ஜெர்மானிய மந்திரிசபை முதலாளிகளுக்குக் கட்டளையிட் டிருக்கிறது. ஓரிடத்திலிருந்து மண்ணை வேறோரிடத்திற்கு எடுத்துச் செல்லும்போது பதினைந்து கிலோகிராம் எடைக்குமேல் அவர்கள் தலையில் சுமத்துதல் கூடாது. இவ்விடங்களில் வேலை செய்யும் பெண் தொழிலாளர்களுக்கு ஆண்களை விடக் குறைந்த கூலி தரப்படுகிறது. இக் குறைந்த கூலியைக் கண்டு பெண்கள் இங்குத் தொழில் செய்ய முன்வரமாட்டார்கள் என்ற எண்ணத்தாலேயே அவ்வாறு செய்யப்பட்டிருக்கிறது.

உணவுப் பொருள் செய்யும் தொழிற்சாலைகளில் எவ்விதத் தடையுமின்றி அவர்களுக்குத் தொழில்கள் அளிக்கப்படுகின்றன. இங்கு உஷ்ணம் அதிகமில்லாத அறைகளில் பெண்கள் சந்தோஷத்தோடு வேலைசெய்ய முடியும். சுரங்கத் தொழிலிலும் அவர்களுக்கு இடமில்லை. ஸிலேஷியா என்ற இடத்திலுள்ள சுரங்கத் தொழிற்சாலையில் மட்டும் பூமிக்கு மேலே வேலை செய்யும்படி சில பெண்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். பாதரட்சைகள் செய்யப்படும்தொழிற்சாலைகளிலும், பிரம்புக்கடைகளிலும் அதிக பெண்கள் வேலை பெறுகிறார்கள். உலோகத்தொழிற்சாலைகளில் நூற்றுக்கு இருபது பேர் பெண்கள்.

கருக்கொண்டிருக்கிற நாட்களில் சம்பளத்தோடு ஓய்வு தரப்படுகிறது. பிரசவத்திற்கு முன் ஆறுவாரமும், பின் ஆறுவாரமும் விடுமுறை நாட்களாகும். குழந்தை பிறந்த உடனே குழந்தைக்கு வேண்டிய சகல சாமான்களும் உடைகளும் சிசுபரிபாலன நிதியிலிருந்து அரசாங்கத்தால் அளிக்கப்படுகின்றன.

### மேற்பார்வையாளர்

தொழிற்சாலைகளில் சட்டப்படி பெண்களுக்கு அனுமதிக்கப் பட்ட பாதுகாப்புக்களைக்காப்பதற்காகப்பெண் மேற்பார்வையாளர் அமர்த்தப்பட்டிருக்கின்றனர். தொழில் முறையில் பெண்தொழிலாளருக்கும் முதலாளிக்கும் நெருங்கிய சம்பந்தத்தை உண்டாக்குவதே இம்மேற்பார்வையாளரின் முக்கிய கடமையாகும். அதனால் நன்றாகப்படித்துச் சகல தொழில்களிலும் தேர்ச்சி பெற்றிருக்கும் பெண்மணிகளே மேற்பார்வையாளர்களாகப் பொறுக்கப்படுகிறார்கள்.

தொழிலாளிகளாக இருந்தபோதிலும் பெண்களுடைய படிப்பைக்குறித்தும் அரசாங்கம் சிரத்தை எடுத்துக்கொள்கிறது. இது குறித்து ஒவ்வொரு தொழிற்சாலையிலும் மாதர் கழகங்கள் தோற்றுவிக்கப்படுகின்றன. ஓய்வு நேரங்களில் பெண்களுக்குரிய கல்வியளிப்பதே இம்மாதர் கழகங்களின் நோக்கமாகும்.

### ஜெர்மானியப் பெண்களும் சட்டங்களும்

ஜெர்மானியச் சட்டங்களை மாற்றவும், திருத்தி அமைக்கவும் தனியே ஒரு சங்கம் நிறுவப் பெற்றிருக்கிறது. இச்சங்கத்தில் தேசத்திலுள்ள நியாயாதிபதி முதல் தொழிலாளி வரையில் உள்ள பலர் அங்கம் பெற்றிருக்கிறார். பெண்களுக்கும் இச்சபையில் இடமிருக்கிறது. குடும்ப வாழ்க்கையைச் சிறப்பிக்கவேண்டுமென்பதே அரசாங்கத்தின் பெருநோக்கம். குடும்பச் சிறப்புக்கு அடிப்படையாக உள்ள தாய்மையும், இல்லறம் நடாத்தற்குரிய சிறப்பும் பெண்களிடத்திலேயே இருக்கின்றன. ஆண்களும் பெண்களும் கலந்து உறவாடுவதனாலேயே குடும்ப வாழ்க்கை சீர்பெறும். அதனாலேயே பெண் அங்கத்தவர்கள் இச்சபைக்குஅத்தியாவசியமாகிறார்கள். குடும்ப வாழ்க்கைக்கான சட்டங்களை அமைப்பதில் பெண்களுடைய கருத்துக்களே பெரிதும் துணையாகின்றன. பெண்கள் இவ்விதயோசனைகள் கூறுவதோடு அமையாது பெண்களுக்குரிய கஷ்டங்களையும் இச்சபையில் முறையிடுகிறார்கள். குழந்தைப்பராமரிப்பு, விவாகரத்து முதலியவைகளே இச்சங்கத்தில் ஆலோசிக்கப்படும் முக்கிய விஷயங்களாகும். இவ்விஷயங்களில் மிகப் பாடுபடுபவர் பர்லின் நகரத்திலுள்ள சிறந்த வழக்கறிஞராகிய டாக்டர். எபன் செர்வாஸ் என்ற அம்மையார்.

—"நியூஸ் இன் பிரீப்"

---

அகில இந்தியக் காங்கரஸ் கமிட்டி அங்கத்தினர்களையும், காங்கரஸ் தலைவரையும் தேர்ந்தெடுக்க டிசம்பர் 6-ந் தேதி குறிப்பிடப்பட்டிருக்கிறது.



## இறந்த காதலி

(திரு. என். எம். எஸ். தீன்)

இரவு மணி 12 இருக்கும். இந்த நள்ளிரவில் மௌண்ட் ரோட்டில் தனது நாயுடன் நடந்து கொண்டிருந்த ஒரு தோட்டக்காரன் தனது நாய் சமீபத்திலுள்ள கல்லறையை நோக்கிக் குரைப்பதைக் கண்டான். அவன் கூர்ந்து நோக்கும்போது அந்தக் கல்லறையில் ஒரு வாலிபன் புதைகுழியொன்றைத் தோண்டி அதனுள்ளிருந்த ஒரு சவத்தை வெளியில் எடுப்பது தெரிந்தது. உடனே தோட்டக்காரன் குதித்தோடி வாலிபனைப் பிடித்துக் கொண்டான். அச்சவம் முதல் நாள் புதைக்கப்பட்ட ஒரு வாலிப நங்கையின் உடலே.

பின்பு வாலிபன் போலீஸ் கட்டிடத்தினுள் நிறுத்தப் பட்டான். பிரபல வக்கீல் குமாரனான அவன்மீது வழக்கு நடந்தது. அந்த வாலிபனைப் பற்றிய சாதக பாதகமான சாக்ஷியங்களுக்குப் பின்னர், நீதிபதி அவனைப் பார்த்து "நீ என்ன கூறுகிறாய்" என வினவினார்.

அதற்கு அந்த எதிரி தனது சார்பாக வாதிக்க எவருங்கிடையாது என்று சொல்லியதுடன் கீழ்வருமாறு கூறினான்:—

"நான் அதிகமாக எதையுங் கூற விரும்ப வில்லை. கல்லறையிலிருந்து எடுக்கப்பட்ட நங்கையும் நானும் சிறுவர் முதலே அன்புமிக்க காதலர்களாயிருந்தோம். நியாயமான முறையில் இருவரும் திருமணம் செய்து கொள்ள விரும்பினோம். ஒருயிரும் ஈருடலுமாயிருந்த எங்கள் காதலின் அளவை மட்டிட்டுச் சொல்லுதல் இயலாது. அவளையன்றி என் கண் வேறொன்றைக் காணாது. என்னையன்றி அவளது மனம் வேறொன்றை நினையாது. இந்நிலையிலுள்ள எங்களின் உள்ளக் கிடக்கைக்கு இடையூறாக உற்றாரும், பெற்றாரும் இருந்து வந்தனர். அறிவிற்கும் அழகிற்கும் அந்தஸ்திற்கும் ஒவ்வாத வயோதிகன் ஒருவனுக்கு அவளைத் திருமணஞ் செய்விக்கப் போவதாய் அவளது பெற்றோர் முடிவு கட்டினர். அது அவளது உடலை மெலிய வைத்து விட்டது. பின்பு, பெற்றோர்கள் குறிப்பிட்ட விவாகத் தேதியின் முடிவே அவளது உயிருக்கு முடிவாய் விட்டது.

"கை நிறைந்த பொருளைவிடக் கண்ணிறைந்த கணவனே மேல்," என்னும் பழமொழியையும் உலகம் மறந்து விட்டது. உயிர் துறந்த காதலி இதோ என் கண்முன் நிற்கின்றாள். உங்களின் நீதிபரிபாலனத்தையும் இதோ நோக்கிப் புன்முறுவல் செய்கின்றாள்.

அவளது உடலைச் சுதந்திரப்படுத்திக் கொண்டவர் அவளை மண்ணில் புதைத்துச் சென்று விட்டனர். அவளது ஹிருதயத்தைச் சுதந்திரப்படுத்திக் கொண்ட என்னை, அவள் தனது வாசனையினால் அழைக்கின்றாள்; நிமிஷத்துக்கு நிமிஷம் என் முன் தோன்றி மறைகின்றாள். அவள் அழைப்புக்கு இணங்கிய நான் அவள் இருப்பிடம் சென்றேன். வேறு எவர்க்கும் உரிமையிலாது அவளுக்கே சொந்தமான அக் கல்லறையில் அவள் என்னை அனுமதித்தாள். அவளது பிண ஆடையே நறுமண ஆடையாய் விளங்குகின்றது. இருட்டறையானது ஜோதிப் பிரகாசமாய்த் திகழ்கின்றது. அழுகிய துர்நாற்றமென்று சிலர் அருவருப்பது அறியாமையா லன்றோ? ஆ! என்ன கவர்ச்சியான-மனோரம்மியமான-மணங் கமழ்கின்றது! பதினறு பிராயமுள்ள அவள் இதோ வாய் திறக்க மாட்டாமல் கிடக்கிறாள்! அவளுடைய கட்டுக்கடங்காத காதலைத் தணிக்க யாரே பரிகாரந் தேடினர்? எங்கள் இருவரின் களங்கமற்ற அன்புக்கு எவரே சாக்ஷியங் கொடுத்தனர்?

எனது கலங்கிய சித்தந் தெளிய ஓரே மருந்துண்டு. எனது அலைப்புண்ட மனம் ஒருநிலைப்பட வழிஒன்றுளது. பிதற்றுகின்ற எனது வாய் நிதானப்பட ஓரே ஒரு பரிகாரந்தானுண்டு. அதுவே நான் எனது காதலிக்குக் கொடுக்க வேண்டிய ஓரே ஒரு கடைசி முத்தம்" என்று வாலிபன் கூறிக் கொண்டிருக்கும் போது அவனை யறியாமலே கண்ணீர் உகுத்து விட்டான்.

நீதி மன்றம் நிச்சப்தமா யிருந்தது. அவ்வாலிபன் தோற்றம் யாவரையும் வசீகரித்தது. ஜூரர்கள் யாவரும் 'வாலிபனுக்குச் சித்தக் கலக்கம்' என்று தீர்மானங் கொடுத்தார்கள். இருபத்து நான்கு வயதுள்ள "நாதன்" என்ற அவ்வாலிபன் விடுதலை பெற்று விழிநீர் ததும்ப வெளியானான். காதலின் அளவும் காணப்பட்டது; கதையும் முடிந்தது.

## இரவு சாப்பிடாதீர்கள்

(டாக்டர். எஸ். கே. குப்தா)

பொதுவாக மனிதருக்கு மூன்று வேளைச் சாப்பாடு போதும். அவசியமிருந்தாலொழிய நான்காவது வேளை சாப்பிடல் வேண்டுவதில்லை. சாதாரணமாக மக்கள் படுக்கைக்குச் செல்வதன் முன்னரே கடுமையான உணவைச்சாப்பிடுகிறார்கள். அது தவறு. அதனால் விளைவது நன்மை யல்ல; தீமையே.

மக்கள் படுக்கைக்குப் போகு முன் சீக்கிரம் ஜீரணிக்கக் கூடாத உணவைச் சாப்பிடுவது வழக்கமாகி விட்டது. பெரிய விருந்துகள் அமைப்போர் படுக்கப் போவதன் முன்பும், பாதி ராத்திரியிலும் விருந்து நேரத்தை ஏற்படுத்துகிறார்.

இவ்வித விருந்துகளில் அடிக்கடி உண்டு பழக்கப்பட்டவர்களுக்குப் படுக்கப் போகுமுன் பசி எடுப்பதுபோல் தோன்றும். அப்பசியைத் தணிக்க உண்டால் நித்திரையில் அமைதியின்மை, தூக்கமின்மை, கெட்ட கனவுகள் உண்டாகும். ஆகவே தூங்குவதன் முன் சத்து மிகுந்த உணவைச் சாப்பிடுவது நல்லதல்ல.

எனது நண்பர் ஒருவர் இரவு 10 மணிக்குத் தூங்குவது வழக்கம். தூங்குவதன் முன் அவர் வயிறு நிறைய உண்பார். அதனால் விடியற் காலம் மூன்று மணி சுமாருக்கு அவருக்கு வயிற்றில் உபத்திரவம் ஏற்படுவதுண்டு.

நாம் சாப்பிடும் ஆகாரத்திலுள்ள சர்க்கரைப் பொருள்கள் ஈரலுக்குச் செல்கிறது. அங்கு அவை 5 மணி நேரத்தில் 'கிளிகோஜன்' என்ற ஒரு இரத்தப் பொருளாக மாற்றப்படுகிறது. இப்பொருள் சாப்பிட்ட 5 மணி நேரத்திற்குப் பிறகு ஈரலிலிருந்து இரத்தக் குழாய்களுக்குச் செல்கின்றது. இந்தப் பொருள் மூளைக்குப் புத்துணர்ச்சி அளிக்கக் கூடியது. அதனாலேயே விழிப்புண்டாகிறது.

தூங்குமுன் சாப்பிடாவிடினும் மாலை 6 மணிக்கு வயிறு புடைக்க உண்டால் விடியற்காலம் விழிப்பு ஏற்படுவது சகஜம்.

வயிறு நிறைய உண்ணத்தக்க நேரம் நடுப் பகல். நவீன நாகரிகத்தின் பெயரால் பகல்நேரத்தில் குறைவாக உண்டு இரவு நேரத்தில் அதிகமாக உண்போர் அதை மாற்றியமைத்துக் கொண்டால் தேக ஆரோக்கியம் கெடாமலிருக்கும்.

மலச்சிக்கல், தணியாததாகம், மூச்சு விட முடியாமல் மூச்சு விடல் முதலியன தூங்கு முன் சாப்பிடுவதால் ஏற்படுகின்றன. இந்தக்கெட்ட பழக்கத்தை விட்டு விடுங்கள். சுகமா யிருப்பீர்கள். நல்ல தூக்கம் உண்டாகும். விடியற்காலம்எழுந்திருந்ததும் பசிதோன்றும். அதிகமாகக் கனாக் காணமாட்டீர்கள்.

இப் பழக்கத்தைத் தவிர்க்க முடியாதவர்கள் படுக்கப் போகு முன் பால் சாப்பிடல் நன்று. காப்பி முதலிய பானங்கள் அருந்துவதால் தீமையே விளையும்.

—'ஹெல்த்'

## ஆதிரையார்

(ஸ்ரீமதி - த. பதுமாவதியம்மையார்)

### VII

#### இறையை இறைஞ்சுதல்

சாதுவர் தமக்குக் கிடைத்த மரத் துண்டைப் பற்றிக் கொண்டு நீண்ட தூரம் நீந்திச் சென்றார். கரை ஒன்றும் அவருக்குப் புலனாகவில்லை. அவர் கையும் மெய்யும் சோர்ந்தன. அலையை எதிர்த்து நீந்த இயலாது அவர் துன்புற்றனர். அந்நிலையில் அவருக்கு ஒன்றன் பின் ஒன்றாகப் பல எண்ணங்கள் தோன்றின. தம் இளமையை உன்னினர். அவ்வமயம் அவரை இருமுதுகுரவர் பாராட்டிய மேன்மையும், அவர் செல்வச் சிறப்பில் திளைத்திருந்த தன்மையும், கல்விகற்ற சீர்மையும் அவர் நினைவிற்கு வந்தன. தாம் வாணிபத்தினால் பொருளீட்டிய திறமையும், பல்லோராலும் புகழப்பட்ட நிலைமையும் அவர் மனக்கண் முன் நின்றன. கற்பிற்கணியாம் காதற் கிழத்தியுடன் அவர் இல்லறம் நடாத்தியதும், பரத்தையை விரும்பி வறிஞரானதும், அக்கணிகை மாது கை விட்டதும், இப்போது தாம் கடலில் கிடந்து கலங்குவதும் அவருக்குக் கனவு போல் தோன்றின. "என்னே! என் அறியாமை! நான் பொன்னனைய மனைவியை விட்டு அப்பரத்தையை விரும்பின தினாலன்றோ இத்தொல்லைக்கு ஆளானேன்! கணிகையரை விழைதல் பாபமென அறிந்தும் நான் அடாத காரியத்தையே யன்றோ செய்தேன்? இதற்குத் தக்க தண்டனையையே இறைவன் எனக்கு அளித்தான்! அந்தோ என் உயிர் நற்கதி அடைதல் யாங்ஙனம்? இறைவா, நல்லருள் அளிப்பாயா! ஐயோ நான் ஈசன் இட்ட கட்டளையை மீறி நடந்தவனல்லனோ! எந்தை யின்னருளைப் பெற நான் விரும்பல், முடவன் கொம்புத் தேனுக்குஆசையுறல் போன்றதன்றோ! எய்தற்கரிய மானிடப் பிறவியைப் பெற்றிருந்தும் என்ன நற்கிரியைகளைச் செய்தேன்! நாட்கள் அவமே கழிந்தனவே! கற்றும் கல்லாக் கசடனானேனே! ஐயோ மாசற்ற மனைவியை மதித்தேனில்லையே! இல்லறமே நல்லறமென ஓம்பாது வெறுத்துச் சென்று பிறனில் விழைந்தேனே! பொருளைப் பதமென நினைத்துப் பலவிடத்திலும் தூற்றினேனே! எந்தையடிகளை வழுத்தாது பரத்தையின் பாதங்களை வருடி நின்றேனே! இன்னும் எண்ணிலடங்காப் பல தீக் கிரியைகளியற்றிய இப்பாவிக்கும் உய்வுண்டாகுமா! இறையருள் கிடைக்குமா! தாயினுமினிய பரம்பொருளே! தண்ணருள் வாய்ந்த தனி மலையே! சேய்மையிலும், அண்மையிலுமிருந்து மக்கட்கு அறிவுறுத்தும் ஆண்டவனே! அடியேனை ஆட்கொள்ளுதல் வேண்டும்" என்றிறைஞ்சினர். இதனால் சிறிது பலனுண்டாக அவர் விரைவாக நீந்த ஆரம்பித்தார். வெகு நேரம் நீந்தித் தலை தூக்கி நாற்றிசையும் நோக்கினர். அவருக்குக் கரை யொன்றும் தோன்றவில்லை: அதிகநேரம் நீரிலிருந்ததனால் அவர் உடல் சிலிர்த்தது. அவர் மரக் கட்டையை வன்மையோடு பிடிக்கவும் இயலாது தவித்தனர்.

#### உருவெளித் தோற்றம்

அந்நிலையில் ஆதிரையாரின் அழகிய உருவம் சாதுவர் மனக் கண்முன் நின்றது. தாம் கடலில் தத்தளிப்பதை அவர் அறவே மறந்தார்; அஃது உருவெளித் தோற்றம் என்பதை உணர்ந்தாரில்லை. உண்மையில் அம்மையார் தம் எதிரில் நிற்கின்றாரென்பதே அவர் தம் எண்ணம். அச்சமயம் தாம் செய்த தீக்கிரியைகள் பலவும் அவர் நினைவிற்கு வந்தன. அதனால் அம்மையார் முகத்தை நோக்க அவர் மனங்கூசிற்று. அவர் சிறிது போழ்து கண் மூடி வாய் பேசாதிருந்தனர்; பின்னர் ஆதிரையாரை மன்னிப்புக் கேட்கவேண்டுமென்ற எண்ணத்துடன் கண் விழித்தனர். "என் அருமந்தன்ன ஆதிரையே! நான் செய்த பிழைகளைப் பொறுத்தருளல் வேண்டும்! சினம் கொள்ளற்க! கசடனென்று கைவிடேல்! நான் அறியாமையினால் செய்ததன் பலன் கைமேற் கிடைத்தது! நீயும் வெறுப்பின் நான் உய்தல் யாங்ஙனம்? இனி அத்தகைய கொடுந் தொழிலைச் செய்யேனென்பது உறுதி! மாதே! நின் வாய் திறந்து பொறுத்தேனென்று கூறாயோ! வாளா விருப்பதன் வகைதானென்னே! இஃதுனக்குத் தகுதியன்று! இவ்வமயம் எனைக் காவாதொழிதல் நலமன்று! ஐயோ, நின் வேலனைய விழிகள் என் மனத்தில் ஊடுருவிப் பாய்கின்றனவே! நான் கூறுவது உண்மைதானா என்றறிய நீ விரும்புகின்றனை போலும்! ஒருமுறை துன்பமனுபவித்தபின் மறுமுறையும் அத் தீவழியில் கால்வைக்க என் மனமெழுமா? அன்றிப் பொறுத்தற்கரிய குற்றமென நீ உன்னுகின்றனை போலும்! ஆம். உண்மையே. நான்என் செய்வேன்! என் ஊழ் அவ்வாறு என்னை ஈர்த்துச் சென்றது! இனி நான் ஊழையும் வெல்லும் அறிவு வாய்க்கப் பெற்றேன்! பெண்மணி! நீ இன்னும் வாய் பேசாதிருத்தற்குக் காரணம் யாது? பொறுமையே பூணெனக் கொண்ட நீ இவ்வளவு கோபம் கொள்ளுதல் அழகாகுமா? இன்னே நின் சினத்தை அகற்றுவாய்!" என்று கூறிக்கொண்டே சாதுவர் அத்தோற்றம் காணப்பட்ட இடத்தை நோக்கி விரைந்து நீந்திச் சென்றார்; தம் ஒரு கையினால் அம்மையாரைப் பற்றத்தாவினர். அங்கு நீர் தவிர வேறொன்றும் கையிற்படவில்லை. அவர் மருட்சியடைந்தார்; தம் கண்களை நன்கு துடைத்துக் கொண்டு கூர்ந்து நோக்கினர்; அங்கு ஒருவருமிலரென உணர்ந்தார். உடனே வங்கம் உடைந்ததனால் தாம் நீரில் வீழ்ந்து தவிப்பது அவர் நினைவிற்கு வந்தது. அவர் நெடுமூச் செறிந்தார். "உருவெளித் தோற்றத்தைக் கண்டு நான் உணர்விழந்தேனே! என் அறியாமையை என்னென்பது! இனி ஆதிரையாரைக் காணும் பாக்கியமும் எனக்குக் கிட்டுமோ? அஃது ஒருபோதுமில்லை! என் கண்கள் சுழல்கின்றனவே! நாவுலருகிறதே! மெய்சோருகிறதே! இதுவே என் முடிவு போலும்! கற்பிற்கனியே! என்னை மன்னிப்பாய்! இறைவா என்னை ஆட்கொள்ளும்" என்ற நினைவுகள் அவர் மனத்தில் ஊசலாடக் கடலில் நீந்திக்கொண்டிருந்தார்.

#### அம்மையார் அகம்

இனி ஆதிரையாரை நோக்குவாம். சாதுவர் பரத்தையினால் வெறுக்கப்பட்டதும், அவர்வங்கமேறி வெளிநாடு சென்றதும் அம்மையார் செவிக்கெட்டின. அக்கொடுஞ்சொல் பெரிதும் வருத்த அவர் மூர்ச்சித்தார்; சிறிது நேரங்கழித்து கண்விழித்தார். அன்னையார் வெயிலிடைப்பட்ட புழுவெனத் துடித்தனர். அவர்மனம் புழுங்கிற்று. வெகுநேரம் அவ்ருக்கு உள்ளந்தெளிந்திலது. என்நினைப்பது? என்செய்வதென்பதை அறியாதவரானர். சாதுவர் தம்மைத் தனியே விட்டுவிட்டுச் சென்றனர் என்பதை உன்ன உன்ன அவருக்குச் சோர்வுண்டாயது. "இஃது உண்மைதானா? இது நம்பக்கூடியதா? பரத்தையினால் புறக்கணிக்கப்பட்டவர் என்னுழைவந்து ஒருவார்த்தையேனும் கூறவில்லையே! பொருள் ஒன்றும் அவரிடம் இல்லையென்பது உண்மையே! நிதியற்றவரை வெறுத்தல் கணிகையர் காரியமல்லவா? அவள் கைவிட்டதும் அவர் மனமுடைந்ததுபோலும்! இன்றேல் தம்மைவிட எனக்குத்துணை வேறு இல்லையென்பதை அவர் அறிந்திருந்தும் என்னிடம் உரையாது வெளிநாடு செல்ல ஒருப்படுவரா? நாதா! உள்நாட்டிலிருப்பினும் என்றேனும் ஒருநாள் தங்கள் கூட்டுறவு கிடைக்குமென்று நினைத்திருந்தேன்? வெளிநாடு சென்ற நீர் திரும்பிவர எத்தனை நாட்கள் செல்லுமோ! இங்ஙனம் என்னைத்தனியேவிட்டுச்செல்லுதல் தங்கட்குத் தகுதியா? நீர் என்னையும் உடனழைத்துச் செல்லலாகாதா? தங்கட்குப் பலவகையினும் நான் துணைபுரியேனோ! உயிர்சென்றபிறகு உடல் என் செய்யவல்லது? நாதா! நீர்அடியாளிடம் விடைபெற்றேனும் செல்லலாகாதா! என்னைக்காணவும் விரும்பிற்றிலரோ? அன்றிப் பெண்கள் யாவரும் ஓரினத்தவரல்லரா? பொருளற்ற நம்மை நம் மனைவியும் விரும்பாள் என உன்னினீரோ! அன்பரே! தாங்கள் எக்காலத்து எந்நிலையில்வரினும் நான் ஆதரவளிக்கப் பின் வாங்கேன் என்பதை நீர் அறியீரோ!"

#### ஊழை வெறுத்தல்

"ஐயோ! நம்குலத்தின் கீர்த்தி யென்னே? முன்னோரின் பெருமிதம் எத்துணைத்து? நீர் இவைகளனைத்தையும் மறந்தீரே! சீ! நான் என் அன்பரை கோவதில் பயனின்று. பசும் பொற்கலத்தில் பெய்த தேவாமிருதமும் துளிவிஷத்தினால் கெட்டுவிடுமன்றோ! அங்ஙனமே என் சேர்க்கையின்மையாலேயே என் அன்பர் மனம் குற்றமடைந்ததுபோலும்! இன்றேல் சுத்த சீலராம் அவர் மாறுதற்குக் காரணம் யாது? துணைவியின் நல்வினையினாலேயே இல்லமும், தலைவரும் நற்புகழுடைவர் என்பது ஆன்றோர்வாக்கன்றோ? நான் நல்வினையைச் செய்திருப்பின் அவர் இவ்வண்ணம் துன்புறுதற்கு வகையுண்டாகுமோ! என் தீவினையேயன்றோ அவரை இவ்வாறு அல்லற்படுத்திற்று? உலகம் என்னையே பழிக்குமென்பதில் தடை யாது? என் போன்ற கொடுவினையாளரும் உலகில் இருப்பரா! இவ்வளவு பெரும் பழியையேற்றும் என் உயிர் மாயாமல் நிற்கின்றதே! மானம்பட வாழ்தல் எவ்வளவு இழிவு! என் ஊழினால் பிணைக்கப்பட்ட என் கணவரும் என்னைவிடுத்து வெளிநாடு சென்றார்! இனி நான் என்செய்வேன்? எனக்கு ஆதரவு கூறுவார் ஒருவருமில்லையே!

#### தற்கொலைக்கு முயற்சி

ஓ! இஃதென்ன பேதை மதி! நான்பிறர் ஆதரவை நாடுதல்என்கருதி? அயலாரை நாடி நின்றோர் தேற்றுவதைப் போன்று நடிப்பர்! ஆயின் அவர்களியம்பும் ஒவ்வொரு மொழியும் நம்மனத்தை அம்பெனத் தைக்கும்! இஃது உலக இயற்கை! இதனால் நமக்கு மென் மேலும் துன்ப முண்டாகுமேயன்றி வேறு பயனில்லை. இனி நான் உயிர்வாழ நினைத்தல் என்கருதி? கணவரால் புறக்கணிக்கப் பட்ட இப்பேதைக்கு உலகில் வேறு இன்பமும் உளதா? நான் மரித்தலே மேன்மையாகும்" என்று ஆதிரையார் எண்ணி அதற்குரிய பல உபாயங்களை ஆராய்ந்தனர்! இங்ஙனம் சிறிதுபோது சென்றது.

#### தூய நினைவு

சடுதியில் அவர் மனத்தில் ஓர் எண்ணம் முதித்தது; அவர் திடுக்கிட்டார். "அந்தோ நான் என் செய்வேன்! இவ்வுயிர் எனக்குச் சொந்த மன்றே! நான் என்கணவரைக் கைப்பற்றினவன்றே என் உயிர், உடல் இரண்டும் அவருக்கே தத்தம் செய்யப்படவில்லையா? அவ்விரண்டில் ஒன்றேனும் என்னுடையதல்லவே; அங்ஙன மிருக்க இவ்வுயிரை நான் எங்ஙனம் மாய்த்துக் கொள்ள இயலும்? எம் இருவர் மாட்டு நிகழும் அன்பினாலன்றோ நாங்களிருவரும் பிணைக்கப்பட் டிருக்கிறோம். அன்புடையார் வைத்த நிலையில் இருக்க வேண்டுவது என் கடமையன்றோ? அதை ஒழித்து நான் வேறுகாரியஞ் செய்ய முயலல் தகுதியா? கணவர் குறிப்பறியாது நடத்தல் முறையன்று; அவர் என்னைத் துறந்தாரல்லர்! அன்புருவாய அவருக்கு என் மாட்டு வெறுப்புண்டாவது யாங்ஙனம்? என் பேதை மதியால் நான் பிறழ நினைக்கின்றேன்! பொருள்தேடவேண்டியே அவர் வெளித்தேயம் சென்றிருப்பர்! என்னிடம் விடை பெற்றுச் செல்ல அவருக்குச் சமயம் வாய்த்திராது! ஆதலின் அவர் திரும்பி வருமளவும் பொறுமையுடன் காத்திருத்தல் என்கடமையாம்" என நினைந்து ஆதிரையார்ஒருவாறுதேறினர்.

#### வழிபாடு

தம் கணவர் இன்று வருவர்; நாளை வருவர் என்ற எண்ணம் அவருக்குச் சிறிது ஆறுதலை யளித்தது. செய்ய வேண்டிய அறக்காரியங்களைச் செவ்வனே இயற்றுவதில் அவர் கண்ணுங் கருத்துஞ் சென்றன. தம் ஆருயிர்த் தலைவர் சுகமுடன் திரும்பிவரல்வேண்டுமென அம்மையார் மென்மேலும் நல்லறங்களைப் புரிந்தனர். சாதுவர் திருவுருவப் படத்தை உயர்ந்த பீடத்திருத்திப் போற்றினர். அதற்கு முக்கால ஆராதனைநடந்தது. மணமிக்க பல மலர்களைக் கொணர்ந்து அவ்வுருவத்தின் காலிற் பெய்வது அவர் தொழில். மணமிக்க மலர்களை மாலை தொடுத்து அதற்கு அழகுபடச் சூட்டி ஆதிரையார் அகமகிழ்வர். சாதுவர் இல்லிலிருந்தபோது நடந்த உபசாரங்களனைத்தும் அப்படத்திற்கு நடந்தன. அன்னையார் எப்போதும் அதன் அருகிலிருந்து கண்ணீர் ஆறாகப் பெருக அழுது நைவர். தம் கணவர் உண்மை உருவத்தை என்று காண்போம் என்னும் ஏக்கம் அவருக்கு உண்டாகும். அவர் அதிசீக்கிரத்தில் திரும்பிவருவர் என்னும் எண்ணம் அவரைச் சிறிது ஆற்றும். இங்ஙனம் ஆதிரையாருக்கு ஒருபோது ஒரு யுகமாகக் கழிந்தது.





## ஆரோக்கிய மஞ்சரி

#### நல்லெண்ணெய்

(திரு. வைத்திய - வேங்கடாசல முதலியார்)

தமிழ்மக்களில், ஆடவர், அரிவையர் இருபாலரும் நல்லெண்ணெயினால் தலை முழுகிவருதல் சர்வ சாதாரணம்.

பிறந்த குழவிப் பருவமுதல் ஆயுள் இறுதிவரை எண்ணெய் முழுக்கைச் செய்து வருதல் பெருவழக்கு.

சிற்சில ஜில்லாக்களில் தேங்காயெண்ணெய், இலுப்பை யெண்ணெய், விளக்கெண்ணெய் என்னும் ஆமணக்கு எண்ணெய் (முத்துக்கொட்டை எண்ணெய்) முதலியவற்றால் தலைமுழுகி வந்தாலும், பெரும்பாலாகத் தமிழர்களின் ஸ்நான முறைக்கு நல்லெண்ணெய் ஏற்றது என்பது பிரசித்தம்.

எள் + நெய் = எண்ணெய். இதைத் தலைப்பாகக் கொண்டு, தேங்கா யெண்ணெய்-இலுப்பை யெண்ணெய் - விளக்கெண்ணெய் - வேப்பெண்ணெய் - கடுகு எண்ணெய் - பிரமதண்டு எண்ணெய்-புங்க எண்ணெய் எனப் பலபடியாக வழங்குதல் தென்னாட்டுப் பழக்கம்.

(கிரோசின் எண்ணெய்) என்று இந்நாளில் வழங்குதலுங் கண்கூடு.

இவற்றால், எள்ளினுடையவும், எள்ளின் எண்ணெயினுடையவும் அரிய குணங்கள் பிரசித்தமாதல் வெள்ளிடை.

எதிர் பாராத காரணங்களால் நேருகின்ற தேகப்பிணி - இதர தடைகள் போன்ற நிர்ப்பந்தமான காலங்களில் அன்றி, வாரத்தொரு முறையேனும் எண்ணெய் ஸ்நானம் செய்து வருதல் நமது நாட்டு வழக்கம்.

பாட்டிமார்கள் உள்ள இல்லங்களில் பேரக் குழந்தைகளுக்கு ஒன்றுவிட்டு ஒருதினம் எண்ணெய் தேய்த்துவருதல் கட்டாய முறையாகும்.

#### முழுக்கு நாள்

ஆண் குழந்தைகளுக்கு, சனிக் கிழமை - புதன்கிழமையிலும், பெண் குழந்தைகளுக்கு - வெள்ளிக்கிழமை - செவ்வாய்க் கிழமையிலும் எண்ணெய் தேய்க்க வேண்டுமெனல் வைத்தியவிதி.

#### ஆண் குழந்தை

ஆண்குழந்தைகளுக்கு ஞாயிறு - செவ்வாய், வியாழன், வெள்ளி இக் கிழமைகளில் எண்ணெய் தேய்த்தல் ஆகாது.

#### பெண் குழந்தை

பெண் குழந்தைகளுக்கு ஞாயிறு - திங்கள் - புதன் - வியாழன் - சனி இக்கிழமைகளில் எண்ணெய் தேய்த்தல் கூடாது.

#### ஆகா நாள் பிணி

இந்த ஆகாத நாட்களில் எண்ணெய் தேய்த்து வருதலால் இந்த நாட்களின் குற்றங்கள் சிறுகச் சிறுக ஒன்று கூடி அச்சரம் - மாந்தம் - வலிப்பு-இழுப்பு, நொடிப்பு - இளம்பிள்ளைவாதம் முதலிய ஆபத்தான வியாதிகளை உண்டாக்கவும் விருத்திசெய்யவும் ஏதுவாகின்றது.

#### நீக்கல்

இவ்விதம் வாரத்தில் இரண்டே நாள் எண்ணெய் தேய்க்கும் நாட்களிலும், கிருத்திகை - அமாவாசை-முதலிய விசேஷ தினங்கள் வந்து விடின், அந்த நாட்களிலும் தேய்க்காமல் நிறுத்திவிட வேண்டியதே ஆரோக்கிய விதி. இவ்விலக்கு நாட்கள் காரணமாகச் சில குழந்தைகளுக்கு (நான்கு மாதங்கள்) வரையில் கூட எண்ணெய் முழுக்கே யில்லாமல் தள்ளிப்போதலும் உண்டு. இதனால் எவ்விதக் குற்றமும் உண்டாகாது.

#### தாய்க்கும் பத்தியம்

ஆகாதநாட்களில் எண்ணெய் முழுக்காட்டுவதால், பலவிதப் பிணிகள் சேர்ந்து விடுங்கால், அப்பிணிகள் தீர்ந்து சுகமாகும் வரையில் எண்ணெய் முழுக்கே யில்லாமல் (எத்தனை மாதங்களாயினும் விட்டு வைத்தல் அவசியமாகின்றதல்லவா? இந்த அவசியமான எண்ணெய் நீக்குயுள்ள காலங்களில் குழந்தைக்கே யல்லாமல் (தாயாருக்கும்) எண்ணெய் முழுக்கையும் நீக்குவதோடு, ஆகாரங்களிலும் பலவித நிர்ப்பந்தமான கடும்பத்தியங்களையும் ஏற்படுத்திச் சித்திரவேதனை செய்கின்ற விசித்திரவைத்தியங்களும் நமது நாட்டில் நடபெற வில்லையா? இவற்றையெல்லாம் நன்கு யோசித்து, மேற்காட்டியவாறு ஆண்குழந்தைக்குச் சனி, புதன்கிழமைகளிலும் பெண் குழந்தைகளுக்கு வெள்ளி, செவ்வாய்க்கிழமைகளிலும் எண்ணெய் ஸ்நானம் செய்வித்தல் நலம்.

#### பாட்டிப் பிரசங்கம்

குழந்தைகளுக்கு ஒருவயது பூர்த்தியானதும் நாள்-கிழமை - நட்சத்திரம்-திதி - ஒன்றையும் சிலர் பார்ப்பதில்லை. 'ஒன்றை விட்டு ஒரு நாள் எண்ணெய் தேய்த்து வராவிட்டால் கெர்ப்பச்சூடு எப்படி நீங்கும்? நரம்புகளுக்குப் பலம் எப்படி வரும்? இரத்த விருத்தி உண்டாவதெப்படி? இப்போது ஊறும் எண்ணெய்தானே அதன் பருவ காலத்தில் சந்தோஷத்தையும், திடகாத்திரத்தையும் உண்டாக்கும்! குழந்தைகள் வளருவதற்கே முக்கிய ஆதாரவாயுள்ளது எண்ணெய் முழுக்குத்தானே! இதில்போய் நாளையும் நட்சத்திரத்தையும் பார்க்கவே கூடாது. 'வைத்தியருக்குக் கொடுப்பதை வாணியருக்குக் கொடு' என்ற பழமொழியும் உண்டல்லவா' என்று பாட்டிமார்கள் தாட்டியாய் நீட்டிப் பிரசங்கம் புரிவார்கள்.

#### அன்புத் துணிபு

ஆகாத நாட்களிலும் எண்ணெய் தேய்த்து அருமந்தபேரக்குழந்தைகளை நோய்க்குள்ளாக்க வேண்டுமெனல் பாட்டிகளின் எண்ணமல்ல! இப்போது எவ்வளவு அதிகமாக எண்ணெய் தேய்த்து வைக்கின்றோமோ, அவ்வளவும் தேக வளர்ச்சியையும், தேக பலத்தையும், ஆரோக்கியத்தையும், அழகையும்அளிக்கும் என்பதே!

#### ஆரோக்கியப் பற்று

பாட்டிமார்கள், அன்பு காரணமான இப்பிடிவாத வழக்கத்தால் குழவிப் பருவத்திலேயே பலவித வியாதிகளை உண்டாக்கி விடுகின்றார்க ளென்றாலும் நல்லெண்ணெயின் மீது உள்ள அழுத்தமான பற்றுதலும், எவராலும் தடுக்க முடியாதஅபாரப் பிடிவாதமும், ஆரோக்கிய வாழ்க்கையை நிலை நாட்டுவதில் முன்னிற்பது கவனிக்கத் தக்கதே! இக் காரணங்களால் ஆரோக்கிய வாழ்விற்கு எள் நெய் எவ்வளவு அத்யாவசியமாகின்றது என்பது விளங்கவில்லையா?

#### பொதுக்குணம்

நல்லெண்ணெயின் பொதுக் குணம், கண் வியாதிகள், காது வியாதிகள், கபால வியாதிகள், காசநோய், விரணம் முதலியவைகளை நீக்கி வருவதுடன் புத்தித் தெளிவு, மனமகிழ்ச்சி, பலம், காந்தி, தேகத் தணிவு, வாலிபத் தன்மை முதலியவற்றை அளிப்பதுமாகும். இது சிறப்பாக மூளை - இதயம் - ஜீவசக்தி - சுக்கிலம் - சுரோணிதம் இவற்றிற்குத் தக்க வன்மையையும் தண்மையையும், ஆயுள் விருத்தியையும் தருகின்றது.

#### எண்ணெய் முழுக்கு விதிகள்

1. எண்ணெய் ஆடுவதில், எள்ளின் தோலை நீக்காமல் மேல் தோலுடன் ஆடவேண்டும். 2. பத்து படி எள்ளுக்கு (25) பலம் பனைவெல்லம் அல்லது கரும்பின் வெல்லம் சேர்த்து ஆடல்வேண்டும். 3. பிறரைக் கொண்டு தேய்த்துக் கொள்ளாமல் தன் கையாலேயே உச்சி முதல் உள்ளங்கால் வரையில் தேகமுழுவதும் நன்றாக— தாராளமாக — தளும்பும்படி. —தேய்த்துக்கொள்ளல் வேண்டும்.

4. தண்ணீர்க் கலவாத தனி வெந்நீரால் (அதிக சூடுஇல்லாமல்) மிதமான சூட்டுடன் நீராடல் வேண்டும்.

5. தலை முழுகினவுடன் மிளகு சீரகம்சேர்ந்த ரசம் கலந்த சாதம்சிறிது உட்கொள்ளல் அவசியமானது.

6. எண்ணெய் முழுக்குத் தினத்தில் மதுவகை - மாமிச வகை - முட்டை வகை - கீரை - தண்டு - மோர் - தயிர் - நெய் - பால் - சீதளபதார்த்தம் - பகல் நித்திரை - இரா விழிப்பு - வெயிலில் நடை - பீடி - சிகரெட் - சுருட்டு - மூக்குப் பொடி - வாய்ப் புகையிலை - முதலியன கூடா.

#### குறிப்பு

கண் - காது - மூக்கு - இவ்விடங்களில் எண்ணெய் கட்டிக் கொள்ளும் வழக்கம் கெட்டது. இதனால் கண்-காது-மூக்கு வியாதிகளை நாமே தேடிக்கொள்வதாகும்.

#### கவனிப்பு

உடல் நலத்தையும், இதய பலத்தையும் விரும்புவோர், எண்ணெய் ஸ்நானத்தன்று, மது - மாமிச வகைகளை ஒழிப்பதுடன், குடி வகைகளில் மிகப் பெரியதாய்ப் பரவி வரும் பெருங் குடியாகிய காப்பி - தேயிலை - கோக்கோ - ஓவல்டின் - சோடா-கலர்-ஐஸ் - முதலிய (பித்தத்தையும் சூட்டையும் விருத்தி செய்கின்ற) வற்றை நீக்கி வைத்தல் நலம்.

## அரசியல் அரங்கம்

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

சர்ச்சில்:—வகுப்பு வாதிகளிலோ?

சாஸ்திரியார்:— பொப்பிலி ராஜா, ஜின்னா, சௌகத்அலி, பி. டி. ராஜன் முதலான திறமையாளர்கள் உண்டு.

சர்ச்சில்:—பேஷ்! இன்னும் என்னென்ன கட்சிகள் உண்டு?

சாஸ்திரியார்:—ஜஸ்டிஸ் கட்சி, முஸ்லிம் கட்சி, சமதர்மக் கட்சி, தாழ்த்தப்பட்டோர் கட்சி, கிறிஸ்துவர்கட்சி, ஆங்கிலோ இந்தியக்கட்சி எனப்பலகட்சிகள் உண்டு.

சர்ச்சில்:—(ஹா! ஹ! எனச் சிரித்துக்கொண்டே) இப்பொழுதாவது ஆங்கிலேயர், இந்தியருக்கு சுயராஜ்யம் கொடுக்க ஏன் மறுக்கிறார் என்பது தெரியுமா?

சாஸ்திரியார்:—தெரியவில்லையே?

சர்ச்சில்:— ஐயா! சாஸ்திரியவர்களே!! இதுகூடவா தெரியவில்லை! ஒவ்வொரு கட்சியாரும் சண்டை பிடித்து மண்டையை உடைத்துக்கொள்வார்கள். அதற்காகவே — சமாதானத்தை நிலை நிறுத்தவே—எமது காருண்ய ஆங்கிலேய துரைத்தனத்தார் சீர் திருத்தத்தில் பாது காப்புகளும், விசேஷ அதிகாரங்களும் செய்திருக்கிறார். இப் பாதுகாப்புகள் போதாதென்கிறேன். இப் பாதுகாப்புகளும், விசேஷ அதிகாரங்களும் இந்தியாவின் நன்மைக்கே! இப்போதாவது உமது மூளையில் படுகிறதா?

சாஸ்திரியார்:—இதுவும் பொய்! முழுப் பொய்!! உண்மை உரைக்கிறீரா? இல்லையா?

சர்ச்சில்:—இதுதான்! உண்மை; முழு உண்மை.

சாஸ்திரியார்:—(தமக்குள்) ஐயோ! ஏமாந்துவிட்டானே. பத்து நிமிடமும் கழிந்து விட்டதே! வாளை வீசப் பலமில்லையே! என் செய்வேன்? (வாளைக் கீழே போட்டுவிட்டார்) சர்ச்சில் கல கலவெனக் கைகொட்டி நகைத்தார்.

சாஸ்திரியார்:—நான் தோல்வியுற்றேன். (எனக் கூறிக்கொண்டே மறைந்தார்.)

வான வெளியில் பால்டுவின் மாக்டொனல்ட் முதலானவர்கள் தோன்றி சர்ச்சிலை ஆசீர்வதிக்கின்றனர்.

#### முடிவுரை

உலக க்ஷேமத்துக்கு ஜன நாயகம், நாஸிஸம், பாஸிஸம் முதலான முறைகள் பயனற்றன. சன்மார்க்க சமதர்மமே உலகத்தின் பஞ்சத்தைப் போக்கி மனிதனை மனிதனாக வாழச் செய்விக்கும். இந்தியாவின் க்ஷேமத்துக்கு ஓரே கட்சி அவசியம்.

